# முகவுரை.

கம்பராமாயணம்: இது "கம்பர் என்னும் புலவரால் பாடப் பெற்றுள்ள ராமாயணம்" என உருபும் பயனும் உடன்தொக்க மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடராகும். ராமாயணம் என்பது ராம + அயணம் என வடசொற்கள் இரண்டு சேர்ந்துழி "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" என்னும் சூத்திரப்படி அகரத்தின்முன் அகரம் வந்து, அவ்விரண்டகரமுங் கெட்டு, இடையில் ஓர் ஆகாரந் தோன்றிற்று. இதனைத் தீர்க்கசந்தி பெற்ற தொடர்மொழி என்பர். ராம என்பது தன்னைப் பற்றுதற்கடுத்த எல்லா வஸ்துக்களையும் தன்மயமாக்கித் தன்னொடு ரமிக்கச்செய்வ தென்னும் பொருளில் வந்தது. அயணம (அயநம்) என்பது கருவி யாகவே "ராமனை அடைதற்கேற்ற கருவியாகிய நூல்" என்பது இதன் பொருளாயிற்று. இந்நூல் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம் என ஆறு காண்டங்களாக மகாகவியாகிய கம்பர் பாடி முடித்தனர். இதன் பிற்பகுதியாகிய சுந்தரகாண்டமென்பதை இவர் காலத்தவராகிய ஒட்டக்கூத்தரென்னும் புலவர் பாடினரென்ப. அவற்றுள் இது ஆரணியகாண்டத்தில் சில பகுதி. 'ஆரணியகாண்டம' என்பது ஆரணியத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியை யுணர்த்தும் பாகம் என உருபும் பயனும உடன்தொக்க ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர் காண்டம் - பிரிவு.

இனி 'நாராயண' என்கின்ற அஷ்டாட்சர மந்திரத்தின் இரண்டாமெழுத்தாகிய ரா என்பதனோடு 'நமசிவய' என்கின்ற பஞ்சாட்சர மந்திரத்தின் இரண்டாமெழுத்தாகிய ம என்பதுங் கூடி 'ராம' என வந்ததுபற்றி எல்லா மந்திரங்களினும் இம்மந்திரமே மிகச் சிறப்புடைத் தாகையான் இதனைப் பக்தியோடு பாராயணம் பண்ணுபவர் அஞ்ஞான மென்கின்ற மலபந்தத்தினின்று விடுபட்டுச் 'சனனம் மரணம்' என்கின்ற பிறவிப் பெருங்கடலை நீந்திப் பரம புருஷார்த்தமாகிய விசிட்டாத்வைதநிலை பெறுவர் எனும் பொருளில்,

"நன்மையுஞ் செல்வமும் நாளும் நல்குமே
திண்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமு மின்றித் தீயுமே
இம்மையே ராமவென் னிரண் டெழுத்தினால்"

என்ற திருவிருத்தத்தால் உணர்த்தப்பெற்றது.

"கவிச்சக்கரவர்த்தி" என உலகமுழுதும் புகழப்படுகிற இப்புலவர் சோழநாட்டின் கண்ணுள்ள திருவழுந்தூரில் உவச்சர் குலத்தினராகிய ஆதித்தன் என்பவருக்குப் புத்திரராக அவதரித்து, திருவெண்ணெய்நல்லூர் சடையப்ப வள்ளலென்னும் சிறந்த சீமானால் விரும்பி ஆதரிக்கப்பெற்றவர் "கல்வியிற்பெரியவர் கம்பர்" என்பது முதுமொழி யாதலின் இவர் வாக்குகள் முற்றும் சொல்லும் பொருளும் பொதிந்து தெள்ளிய பெருங்கருத்தைத் தமதகத்தடக்கி ஓசை நயமும் உவமையழகும ஒருங்கே அமைந்து படிப்போருள்ளத்துட் பெருமித வின்பம் பயப்பனவாம். மேலும இவர் கவிகளில் பெரும்பான்மை முற்றுக்கள் எச்சமபோன்றும், எச்சங்கள் முற்றுப்போன்றும் மூதறிவாளர் அறிவையும் மூரணுறச் செய்யுமெனினும் நுணுகியாய்வார்க்கவை முரணாது தொடர்புற்று வியப்பும் மகிழ்வும ஒருங்கே விளைவுறச் செய்வனவாகும.

இவைபற்றியே இந்நூலைக் "கம்பர் சூத்திரம்" என்பர் பெரியோர். இவர் காலம கி-பி-885 ஆண்டுகட்கு முற்பட்டதென்று கூறுவர் பலர். அங்ஙனமாயின் இற்றைக்கு ஓராயிரமாண்டுகட்கு முற்பட்டதாகும். ஆனால் பசுமலை உயர்தரகலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் ஸ்ரீ: நே. ரா. சுப்பிரமணிய சர்மா அவர்கள் தாமெழுதிய கம்பர் சரித்திரத்தில் சான்று கூறியுள்ள பல ஆதாரங்களைக் கொண்டு இற்றைக்குச் சற்றேறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டதென்று கூறுவதே ஏற்புடைத்தாகும.

இங்ஙனம்,

**நா. கிருஷ்ணசாமி நாயுடு,**
**தமிழ் வித்வான்,**
**மதுரை.**

## ஸ்ரீமத் கம்பராமாயணம்.

# ஆரணிய காண்டச் சுருக்க உரை.

### கடவுள் வாழ்த்து.

#### கலி விருத்தம்.

பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா
ஓதியோதி யுணருந்தோறு முணர்ச்சியுதவும்
வேதம்வேதியர் விரிஞ்சன்முத லோர்தெரிகிலா
ஆதிதேவரவ ரெம்மறிவினுக் கறிவரோ.

பேதியாது - வேறுபடாமல், நிமிர் - தோன்றி வளர்கின்ற, பேதஉருவம் - பல் வேறு வகை வடிவங்களிலிருந்து, பிறழ்கிலா - (அவற்றுட் கலந்துநின்றும்) பிறிதாகாமல், ஓதி ஓதி - (அடுத்தடுத்துப்) பாராயணஞ் செய்து, உணருந்தோறும் - தெளியும்போதெல்லாம், உணர்ச்சி உதவும் - மெய்யுணர்வை மேலும் மேலும் அளிக்கின்ற, வேதம் - (இருக் எசுர் சாமம் அதர்வணம் என்ற நான்கு) வேதங்களாலும், வேதியர் - அவ்வேதங்களைப் படித்துணர்ந்த வேதியர்களாலும், விரிஞ்சன் முதலோர் - பிரம ருத்திராதியராலும், தெரிகிலா - ஆராய்ந் தறியப்படாமல் நின்ற, ஆதி தேவரவர் - சகல வஸ்துக்களுக்கும் ஓராதியாயும் ஸ்ரீ ராம பிரானுயுமிருக்கின்ற அவர், எம் அறிவினுக்கு - எமது அறிவினுக்கு, அறிவு - அறியப்படும் பொருள்.

இவ்வாழ்த்துப் புறப்பொருட் பாடாண்படலத்துக் கடவுள் வாழ்த்து என்னும் துறையின்பாற் படும். கம்பநாட்டாழ்வார் தாம் செய்யப் புகுந்த இப் பெருங்காப்பியம் இனிது முடிதற்குத் தாம் வழிபடு கடவுளும், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளுமாகிய அவனையே வாழ்த்தல் வேண்டுமாகலின் காண்டந்தோறும் அவன் விஷயமே கூறப் புகுந்து, பால காண்டத்தில் அவனது ஸ்வரூப நிலையையும், புருஷார்த்த நிலையையுங் கூறி 'வானின்றிழிந்து' என்னுங் கவியால் சர்வேஸ்வரனாகிய அவன் ஜகத் சரீரனென்பதுங் கூறி இக் கவியில் அவன் வேதங்களாலும் பிரமன் முதலானவர்களாலும் ஆய்ந்துணர்வதற்கரிய பரவஸ்து வென்றுங் கூறினார். இக்கடவுள் வாழ்த்தினால் அவரவர் எடுத்த கருமம் இனிது முடியுமென்பது பெறப்படும்.

**குறிப்பு:**—நிமிர் பேதம் - அல்வழித் தொடர்; வினைத் தொகை. பிறழ்கிலா, தெரிகிலா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். இவை ஆதி தேவர் என்னும் வினைமுதற் பெயர் கொண்டன. உருவம் பிறழ்கி

லாமை - எல்லாப் பொருள்களினும் உடலும் உயிருமாய் உயிருள்ளும் உயிருமாய் அந்தர்யாமியாய் இருக்கின்ற தன்மை. பேதியாது மிளிர்தல் - தீயில் சூடும் நீரில் குளிரும்போல அவ்வவற்றினின்றும் வேறுபடாதிருத்தல். பேத உருவம் - தேவர் முதல் தாவர மீறாச் சொல்லப்பட்ட சராசர ரூபமாகிய எண்பத்து நான்கு லட்ச யோனி பேதங்கள். உருவம் - ரூபமென்னும் வட சொல்லின் திரிபு.

1. (ப-ரை) சித்திரம் - அழகு தங்கிய, குனிசிலை - வளைந்தவில்லை யுடைய, குமரர் - ஸ்ரீராமலக்குமணர்கள், முத்து - முத்துக்களை, இருத்தி - (வரிசையாய்ப்) பதித்துவைத்து, அவ் - அந்தமுத்துக்கள், இருந்தனைய - இருந்தாற் போன்ற, மொய்ந்நகையொடும் - நெருக்கமுற்ற பற்களையுடைய (சீதாபிராட்டி) யுடனும், அத்திரிப் பெயர் - அத்திரி என்னும் திருநாமம் பெற்ற, அருந்தவன் - அரியதவத்தினையுடைய (முனிவர்,) இருந்த - வசித்திருக்கின்ற, அமைதி இருப்பிடமாகிய, பத்திரப்பழுமரப் பொழில் - இலைகளோடு கூடிய பழுத்தமரங்களையுடைய சோலைகள், துவன்ற - நெருங்கிய, பழுவம் - வனத்தினை, (முனிவராசிரமத்தினை), சென்று அணுகினர் - போய்ச் சேர்ந்தார்கள்.

குறிப்பு:— முத்து - முக்தா என்னும் வடமொழிச சிதைவு. இருத்தி - இருத்த வென்னுஞ் செயவெனசசத்துத்திரிபெனினு மொக்கும். அவ் - சுட்டடியாகப்பிறந்த அஃறிணைப் பன்மைப்பெயர். இருந்தனைய - இருந்தாலனைய எனவிரிவதால் வினையெசச உவமமாகும். மொய்ந்நகை - வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நகை - இது தொழிலாகு பெயராய்ப் பற்களையுணர்த்திற்று. சித்திரம் என்ற அடைமொழி சிலைக்குச சிறப்புறநின்றது. பிராட்டி தன்து கணவனோடு நாடு நகர முதலியனவற்றை இழந்து போவதற்கு வருந்தாமையே யன்றி வனத்தின் கண் புகுதலினும் மனமகிழ்சியுடையார் என்பது தோன்ற "முத்திருத்தியவ் விருந்தனைய மொய்ந்நகை" என்றார் ஆசிரியர் குனிசிலை - வினைத்தொகை. அமைதி - தொழிற பெயர். இஃதீண்டு இடமாதிரையாய் நின்றது; பத்திரப்பழுமரம் என்ற சொல்லாற்றல் கடவுள் வழி பாட்டினகண் உபயோகப்படுவனவாகிய பத்திரங்களையும் நைவேத்தியத்திற்கேற்ற கனிவர்க்கங்களையுந் தரத்தக்க மரங்களென்ற சிறப்பினைத் தந்து நின்றது.

2. (ப-ரை) திக்குஉறும் - திசைகளிற் பொருந்திய, செறிபரம் - மிகுந்த பாரத்தை, தெரிய - (இவ்வளவினதென்று) அறியும் வண்ணம், நின்ற - (அவற்றைத்தாங்கி) நின்ற, திரள்பொன்கை - திரட்சிபெற்ற அழகிய துதிக்கையையும். குறுங்கண் - சிறியகண்களையுமுடைய, மலைபோல் - மதயானைகளைப்போல், குமரர் - ஸ்ரீராமலக்குமணர்கள், புக்கு - (அவ்வாச்சிரமத்தினுள்) புகுந்து, காமம் முதலாம் - காமமுதலாகிய, முக்குறும்பு - காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று வகைக் குற்றங்களையும், அற -

முழுதும் நீங்கும் படி, எறிந்த - (விட்டு) விலக்கிய, வினை - (தவத்) தொழிலைக் (கொண்ட), வால்முனிவனை - பரிசுத்தமான அத்திரி முனிவரை, இறைஞ்சினர் - வணங்கினார்கள், (அங்ஙனம் வணங்கவும்) அருந்தவன் - அரியதவத்தினையுடைய அம்முனிவர், உவந்து - மனமகிழ்வு கொண்டு, புகலும் - சொல்லுவாராயினர்.

குறிப்பு:—திக்குறும் - (பிரமன் முதலாய தேவராதியரும் அறிய முடியாது) தடுமாறுகின்ற, செறிபரம் - எங்கும் நிறைந்து நின்ற பரம்பொருள், தெரிய - இவர் தாம் என்று முனிவர் அறிந்து கொள்ளும்படி நின்ற, திரள் பொன் கைக்குறும் - சேர்ந்து நின்ற அழகினைத் தனனிடத்தே கொண்டிருக்கிற, கண் - பெருமை பொருந்திய, மலைபோல் - மலையைப்போல், குமரர் புக்கு - ஸ்ரீ ராம லக்குமணர் புகுந்து என்று பொருள் கொள்ளினுஞ் சிறக்கும். இங்கு மலையை உவமை கூறியது; யாவராலும் காண்டற்கரிய எம்பெருமான் அடியாக் கெளியனாந் தன்மை விளங்குமாறு முனிவர்முன் ஒரு மலையிலக்காய் வந்து நின்றனென்றபடி. போல் என்னும் உவம உருபிடைச் சொல் போல வென்னும் வினை எச்சப் பொருள் கொண்டு புக்கு என்பதைத் தழுவி முடிந்தது.

3. (ப-ரை) குமரர் - தசரதச சக்கரவர்த்தியினது திருக்குமாரர்கள் !, நீர் - நீங்கள், இவண் - இந்த இடத்தே, அடைந்து - வந்து, உதவு - காட்சி கொடுத்த, கொள்கை - தன்மை, எளிதோ - (கிட்டுதற்கு) எளியதோ, (எளிதன்று) அமரர் யாவரோடும் - தேவர்கள் எல்லாரோடும், எவ்வுலகும் - எல்லா உலகங்களும், வந்த அளவே - வந்ததன்மையேயாகும், எமரின் - எங்களில், தவ முயன்றவர்கள் - (இங்கு நீங்கள் வருவதற்குத் தக்க) தவத்தைச் செய்தவர்கள், யார் - எவரோ !, என்று - என்றுகூறி, உருகினன் - மன முருகினார், தமரெலாம் வர - சுற்றத்தார் அனைவரும் (தம்பால்) வந்து சேர, (அதனால்) உகந்தனையதன்மை முனிவன் - மகிழ்வடைந்தாற் போன்ற தன்மையை யுடைய (அம்) முனிவர்.

குறிப்பு:—குமரர் - அண்மை விளி. குமரா நீவிர் - குமரராகிய நீவிர் எனப் பிரித்துப் பொருள் கொள்ளினும் பொருந்தும். உதவு கொள்கை - வினைத் தொகை. எளிதோ - இதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது; எளிதன்று என்பது கருத்து. அமரர் - மரணமில்லாதவர். ‘அமரர் யாவரொடும் எவ்வுலகும் வந்த வளவே’ என்றது, சேதன சேதனங்களாகிய சகலமும் நீரே என்ற பொருள் தந்து நின்றது.

4. (ப-ரை) அன்ன - அத்தகைய, மாமுனியொடு - பெருமை தங்கிய அத்திரி மா முனிவருடன், அன்று அவண் உறைந்து - அற்றை நாள் அவ்விடத்தில் வசித்து, அவன் - அம்முனிவரது, அரும்பன்னி - அருமை வாய்ந்த பத்தினியாகிய, கற்பின் - கற்பு நிலையுடைய, அநசூயை - அநசூயை

என்பவளது, பணியால் - கட்டளையினுல், அணிகலன் - அழகு தங்கிய ஆபரணங்களும், துன்னு - துலங்குகின்ற, தூசினெடு - வஸ்திரத்துடன், சந்து - சந்தனமாகிய, இவை - இவைகளை, சுமந்த - அணிந்துதாங்கிய, சனகன் பொன்னெடு - சனகராசன் புத்திரியாகிய பிராட்டியுடன், ஏகி - (மற்றை நாள்) அவ்வாசிரமத்தினின்று புறப்பட்டு, உயர் தண்டகவனம் - சிறப்புற்ற தண்டகாரணியத்துள், புகுதலும் - பிரவேசித்த அளவில்.

குறிப்பு:—அன்ன - அன் என்னும் உவம இடைச்சொல் அடியாப் பிறந்த பெயரெச்சம். சுட்டளவாய் நின்றதெனினும் ஒக்கும். பன்னி - பத்னி என்னும் ஆரிய மொழிச் சிதைவு. கலன் - ஈற்றிலுள்ள மகர ஒற்று னகர ஒற்ருயது போலி. சந்து - சந்தனமென்பதின் வடமொழிச் சிதைவு ஆபரணங்களோடு புஷ்ப முதலியன வற்றையும் கூட்டிப் பொருள் கொள்ளுதற்கு இங்கு 'இவை' என்ற சொல் வந்தது. சுமந்த என்னும் பொது வினை கலன் பூணுதல், தூசு உடுத்தல், பூசூடுதல், சந்தனம் பூசுதல், முதலிய பல வேறு வினைகளைத் தழுவி நின்றது. பொன் - இலக்குமி, அஃறிணை உயர்திணையானது திணை வழு சீதைச் சுற்றி வந்த பிராட்டிக்கு ரிஷி பத்தினியால் அலங்கரிக்கப்பட்ட திருக்கோலம் மிதிலையில் விவாக மஹோற்சவ காலத்துச் சனகனுல் அலங்கரிக்கப் பட்ட திருக்கோலத்தை ஒத்திருந்தது என்பது தோன்ற ஆழ்வார் சந்துச் சனகன் பொன் என்றருளினார் தண்டகவனம் - தண்டகனது ஆளுகைக்குட்பட்டிருந்த இடம்.

5. (ப-ரை) பூதம் அத்தனையும் - ஐந்து பூதங்களும், ஓர் வடிவு கொண்டு - ஒன்ருய்க் கலந்த உருவத்தைப் பெற்று, புதிதென்று - (இவ்வுருவம் படைப்புக்களில்) புதுமையானதென்று, ஓத - (பார்த்தவர்கள்) சொல்லுதற்கு, ஒத்த - அமைந்த, உருவத்தன் - உடலோடு கூடியவன், உரும் - இடியை, ஒத்த - நிகாத்த, குரலன் - சத்தத்தோடுகூடியவன், அயன் - பிரமன், காதலித்து -(இவன் செய்த தவத்திற்கு) மகிழ்ந்து, அளித்த - கொடுத்த, பாதகணித - கால என்னும் கணக்கை, கடையிட்ட - கடைசியில், வைத்த, லக்கமதவெற்பு - லக்ஷம் மதயானைகள், இடைபட்ட - தம்மிடத்தேகொண்ட, வலியான் - வலிமையைப் பெற்றவன்.

குறிப்பு:—பஞ்ச பூதம் - நிலம் நீர் காற்று ஆகாயம் என்பன. அத்தனையும் என்பதின் ஈற்றும்மை முற்றுப் பொருளது. கடையிட்ட கணிதப் பாதலக்கம் - ஒன்றேகால் லக்ஷம். லக்கம் - லக்ஷமென்ற வடமொழித் திரிபு. மதவெற்பு - இது உவமவாகு பெயராய் மதம்பெற்ற மலைபோன்ற யானை எனப் பொருள் தந்து நின்றது.

6. (ப-ரை) இகல்பெரு - போர் செய்யப்பெருத, வீரம் - வீரம்பொருந்திய, வெம் சிலையினேர் - சீற்றமுள்ள வில்லினையுடைய ஸ்ரீ ராம லக்குமணர், எதிர் - முன்னர், விராதன் என்னும் - விராதன் என்று சொல்லப்

பட்ட, அ - அந்த, கோர - அச்சமுண்டாக்குகின்ற, வெம்கண் - வெப்ப முற்ற கண்களையுடைய, உரும் எறு அன - ஆண் இடிபோன்ற, கொடுந் தொழிலினன் - கொடுமையான செய்கையை யுடையவன், மரங்கள் - விருக்ஷங்கள், தரையில் பேர - பூமியினின்று வேர் விட்டுப் பெயர, வன்கிரி - வலிமையான மலைகள். பிளந்து உக - பிளவுபட்டு நொருங்க, வளர்ந்து - வளர்ச்சி யுடையவனுகி, சார வந்து - அருகில் வந்து, அயல் விலங்கினன் - சமீபத்தில் தோன்றினன்.

குறிப்பு —பேர - பெயர என்பதின் மரூஉ. உக என்னும் செயவினெச்சம் எதிர்காலத்தைக் காட்டி நின்றது. ஏம்மோடு எதிர்த்துப் போராட வல்லவர் இல்லை என்பது தோன்ற ' இகல் பெரு வீர வெஞ் சிலையினோர்' என்றார் ஆசிரியர். பெரு - பெறு = பகுதி; ஆ = ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்ச ஆகார விகுதி.

7. (ப-ரை) நிணம உண்ட - மாமிசத்தைத் தின்ற, நெடு வெண்பல்லும் - நீண்ட வெள்ளை நிறப் பற்களும், வல் எயிறும் - பலத்த வச்கிர தந்தங்களும், மின்னும் - (நெருங்கிப்) பிரகாசிக்கின்ற, பகுவாய் முழை - பிளந்த மலைக்குகை போன்ற வாயை, திறந்து - அங்காத்து, நில்லும் நில்லும் எனவந்து - (ஸ்ரீ ராம லக்ஷ்மணரை நோக்கி) நில்லுங்கள் நில்லுங்கள் என்று சொல்லிக்கொண்டு வந்து, அல்லி புல்லும் மலர் - அக விதழ்கள் செறிந்த தாமரை மலரில், அன்னம் அனையாளை - (வீற்றிருக்கும்) அன்னப் பேடு போன்ற பிராட்டியை, சொல்லும் எல்லையில - (அவன்) நில்லும் என்ற வார்த்தையைச் சொல்லிக்கொண்டிருக்கும் போழ்தே, ஒரு கை - ஒரு கையினாலே, முகந்து - வாரி எடுத்துக்கொண்டு, உயர் - உயர்ந்த விசும்பு - ஆகாயத்தை (நோக்கி), தொடர - செல்லுதலும்.

குறிப்பு:—வல்லெயிறும் என்றது பற்களையும் கடைவாய்ப் பற்களையும் குறித்தது. மின்னு பகுவாய் - இத் தொடர் வினைத் தொகையாயது பற்றி மிகா தியல்பாயிற்று. அல்லி புல்லு மலர் என்றது இங்குச் சிறப்புப் பற்றித் தாமரை மலரைக் குறித்து நின்றது. அல்லி என்பதற்கு நீலநிறத்தானாகிய ராமன் என்று பொருள்கொண்டு ஸ்ரீ ராம பிரானால் தழுவப் பெற்ற பிராட்டியா ரெனினு மொக்கும். அங்ஙனமாயின் புல்லும் என்பது தழுவும் என்ற பொருள் பெறும். அல் - பகுதி; இ - ஆண்பாற் படர்க்கை விகுதி. முகந்து - அள்ளி; இது வினை மாற்றுப்பொருளாய் 'எடுத்து' என்னும் பொருள் தந்து நின்றது.

8. (ப-ரை) வீரனும் - வெற்றியுள்ள (ஸ்ரீ ராம பிரானும்,) வெள் முறுவல் - (தனது) வெண்மையான பற்களால், வெள் நிலவு - வெள்ளிய பிரகாசத்தை, சிறிது உக - சிறிது வீசும்படி (புன்னகை புரிந்து), போர் அறிந்திலன் - (இவன்) போர் புரியு முறையறிந்தவன் அல்லன், இவன் தனதுபொற்பும் - இவன் தன்னுடைய பொலிவையும், முரணும் - வலிமையும், எஞ்சி -

குறைவுபட்டு, தீரும் என - அழிந்து விடும் என்று, நெஞ்சின் - (தன்) மனத்தே, உறு சிந்தை - பொருந்திய ஆலோசனையினால், தெரியா - தெரிந்து, பார வெஞ் சிலையின் - கனத்த சீற்றமுற்ற கோதண்ட மென்ற வில்லினிடத்து, நாண் ஒலி படைத்த பொழுதே - நாணோசையை உண்டாக்கிய அக்கணத்திலேயே.

குறிப்பு:—ஸ்ரீ ராம பிரான் புன்னகை புரிந்த பொழுது வெளித்தோன்றிய பற்களின் பிரகாசத்தை மதி நிலவுக் கொப்பிடப்பட்டது. பற்களின் பிரகாசத்தை வெண்ணிலவென்றும் வில்லினைப் பார வெஞ்சிலை என்றும சொற்றாராதலின் அவைகளை யுடைத்தாயுள்ள வீரன் 'ஸ்ரீ ராமசசந்திரன்' என்று பொருள தநது நினறது. 'தீருமெஞ்சி' எனற தொடாரை எஞ்சித் தீரும் என்று திரித்துப் பொருள் கொள்க. உக - உகு - பகுதி; அ - வினையெச்ச விகுதி. எஞ்சி - எஞ்சு - பகுதி; இ - வினையெச்ச விகுதி

9. (ப-ரை) அரக்கன் - அவ்விராதன. வஞ்சக - வஞ்சனையொடு கூடிய, கொடிய பூசை - கொடிய பூனையினது, நெடு வாயின - பெரிய வாயின்கண்ணே, மறுகும் - (அகப்பட்டு) மனங் கலஙகுகின்ற, பஞ்சரக்கிளியென - கூட்டினிடத திருநது வளர்நத கிளியைப் போல, கதறுபாவையை - வாய்விட்டழுகின்ற பிராட்டியை, விடா - (தரையினகண்) விடுத்து, நெஞ்சு உளுக்கினன் என - மனம் சிதைந்தவன போல, சிறிது நின்று நினையா - சற்று நின்று ஆலோசிதது, அஞ்சனக் கிரியனான் எதிர் - மைம்மலை போன்ற ஸ்ரீ ராமபிரானுக்கு முனனா, அழலா - (வந்து நின்று) கோபித்து.

குறிப்பு.—பிராட்டியை வஞ்சத்தனமாய்க் கவர்ந்துகொண்டு செல்லத் தலைப்பட்டதைப் பற்றி விராதனைப் பூனைகரும், தன் சுற்றததாரை மறந்து, தன் நாயக னில்லின் கண் வாழக்கைப்பட்டுத தன் நாயகனால் அன்புடன் ஆதரிக்கப் பெற்றுக் கணவனைப் பிரிய மனமிலாது காடடுத்ததும் பற்றிப் பிராட்டியைப் பஞ்சரககிளிக்கும் உவமை கூறப்பட்டது. பாவை - சித்திரப் பதுமை; இது உவமை யாகு பெயராய்ச சீதையைக் குறித்தது. "சிறிதளவு அஞ்சனமையால் உலகில் மறைந்து கிடக்கும் நிதியனைத்தையும் காணலாமெனில் அஞ்சனமே திருவுருவான ஸ்ரீ ராமனுக்குத் தெரியாதன ஒன்று மில்லை" எனும பொருள் பெற அவனை 'அஞ்சனக் கிரியனான்' என்றார் ஆழ்வார். இதுவும உவமையாகு பெயராய் ஸ்ரீ ராமனைக் குறித்தது. கதறுபாவை - வினைத்தொகை. விடா, நினையா, அழலா - (விட்டு நினைந்து அழன்று) இவைகளின ஈற்றிலுள்ள ஆகார விகுதிகள். உடன்பாட்டிறந்த கால வினையெச்ச விகுதிகள்.

10. (ப-ரை) ஓர் - ஒரு, மா - பெரிய, மராமரம் - மராமரத்தை, இறுதது - வேருடன் பிடுங்கி, அது கொடு - அதைக் கொண்டு, ஒருங்கு முணர்வோர் - முற்றுமுணர்ந்த ஞானிகளது, உணாவுறும் - (தியானிக்கின்ற) மனததிலே தங்கும், நாமர் ஆம் அவரை - திருநாமங்களையுடைய

ஸ்ரீராமபிரானை, நல்லறம் நிறுத்த - (உலகத்தினிடத்து) நல்ல தருமத்தை நிலைப்பித்தற்காக, அராஅணை துறந்து - ஆதிசேஷசயனத்தை விட்டு, தரை நணுகி நின்றவரை - பூமியிலே வந்து பேரவதாரஞ் செய்திருக்கிற (சக்கிரவர்த்தி திருமகனை), ஓமராமனை - பிரணவமந்திர சொரூபராகிய ராகவனை, எற்றவரலும் - மோதியடிக்க வந்த போழ்து.

குறிப்பு:— நின்றவரை - நின்ற அவரை; அகரந்தொகுத்தல். கொடு - கொண்டு என்பதின் இடைக்குறை, அது கொடு - அதைக் கொண்டு இரண்டாம் வேற்றுமைததொகை நிலைததொடர். அதுகொடு - 'அதனால்' என மூன்றும் வேற்றுமைச சொல்லுருபெனினும் பொருந்தும்.

11. (ப-ரை) ஏறுசேகவன - உயர்ந்த வீரனாகிய ஸ்ரீராமபிரான், இரண்டினொடு இரணடு கணையால - நான்கு பாணஙகளால், அது வேறு வேறு துணி செய்து - அம்மரா மரததைதத துண்டு துண்டாகத துணி படச செய்து, விழுத்து - (அதைக கீழே) தள்ளி விட்டு, நிமிர்தோளி டையும் - (அவவரககனது) நிமிர்ந்த புயங்களிடததும், மாரபினிடையும் - (அசன்ற) மாரபினிடததும், மாறு மாறு விசையான் - மாற்றி மாற்றி, வேகமோடு, ஆறுமஆறும் (தனித்தனி) அவவாறாக, அயில் வெங் கணை - கூர்மையாய சீற்றமுாள அம்புகளை, அழுத்த - அழுந்தும்படி செய்ய, அவனும - அவவரககனும்.

குறிப்பு:— ஏறுசேகவன் - வினைததொகை 'மாறு மாறு' என்ற தன்வினை 'மாற்றி மாறறி' எனற பிறவினைப் பொருள் பெற்று நின்றன. ஏறுசேகவன எனபதனைச சேவக ஏறு என மாற்றிப் போரில் ஆண் சிஙகமெனப் பொருள் கொள்ளினும பொருந்தும. அயிலவெஙகணை - இதனை வினைத் தொகை நிலை தொடராகப் பிரிதது, 'விரோதிகளின் உயி ருண்ணும் கொடிய கணை' என்று பொருள் கொள்ளினும் பொருந்தும.

12. (ப-ரை) மொய்த்தமுள - நெருஙகிப் படாநதுள்ள முட்கள் தனது - தன்னுடைய, உடல் தலை தொளைப்ப - உடலினகண தினவுண் டாகும்படி வருத்த, கைத்தலததின - (தனது) முனனஙகைகளால், முடுகி - விரைந்து, நிமிர - (அவறறை) எடுக்க முயன்று, கடிது கன்றி - (அம்முட்கள் கையிலுநதைத்தலால்) மிகவும் வருந்தி, விசிறும் - வீசியுதறு கின்ற, எய்த்த - ஓடிஇளைத்துப்போன, மெய் - சரீரத்தோடு கூடிய, பெரிய கேழல் என - பெரிய (முளளம) பன்றி போல, தைதத அக்கணைகள் - தன் (உடலின் கண்) தைதத அந்த ஸ்ரீராமனது பாணங்கள், எங்கும் தெறிப்ப - நாலாபக்கங்களிலும் சிதறி வீழ, மெய்சிலிர்தது - (தனது) சரீரத்தை வேகமாய்ச சிலிர்த்து, உதற - உதறுதலும்.

குறிப்பு:— ஓடி இளைத்த முள்ளம பன்றி தனக்குத்தினவுண்டாக்கிக் கொண்டிருக்கிற முட்களை முன்னங்கால்களால் எடுக்க முயன்றும்

அவை அக்கைகளிலும் தைத்துக்கொள்ளுதலால் எடுக்க முடியாமல் தன் உடம்பையே உதறி அம்முட்களை உதிர்த்து விடுவது போல இவனும் ஸ்ரீராமபாணங்களை எடுப்பதற்கு முயன்று அவை கைகளிலும்தைப்பது கண்டு வேதனை பொறுக்கமுடியாமல் மெய்சிலிர்த்து உதறினனென்பது தோன்ற இங்கு முள்ளம்பன்றியை உவமை கூறினர். தலை - இடப்பொருள் பற்றி வந்த எழனுருபு; ஏ - ஈற்றசை.

13. (ப-ரை) இராமன் - ஸ்ரீராமபிரான், எரியின் வார்கணை விட - (அவ்வரக்கன் மேல் தீயைப் போன்ற) நெடிய பாணங்களைப் பிரயோகிக்க, எங்கும் நிலையாது - (அது) எங்குந்தடைபட்டு நில்லாமல், உருவியோட - (அவன் உடலின்கண்) ஊடுருவிச் செல்ல, மாம் ஓடுதல் செயாவுணர்வினன் - பாவத்தன்மை நீங்குதல் இல்லாத செய்கையோடு கூடிய அந்த அரக்கன், வரைபாயும்அருவிபோல் - மலையிலிருந்து வீழ்ந்து ஓடுகிற நீரருவி போல், குருதி ஆறு - இரத்த வெள்ளம், பெருகிச் சொரிய - தன்னுடலிலிருந்து பெருகிப் பாய்ந்து சொரிய, வேகவலி கெட்டு - வீரவான பல மொழிநது, உணர்வு சோர்வு உறுதலும் - அறிவிழிந்து போன உடனே.

குறிப்பு.—எரியின் வார்கணை - அக்கினியஸ்திரம் எனினும் பொருந்தும் செயா - செய்யா என்பதின் இடைக்குறை வேகவலி - வேகமும் பலமும் என உம்மைத்தொகையினும் பொருள் கொள்ளலாம். உணர்வு - உணர்=பகுதி, வ - எழுத்துப் பேறு, உ- விகுதி சோர்வு=சோர் - பகுதி; வு - தொழிற் பெயர் விகுதி.

14. (ப-ரை) எய்வில் - (பாணங்களை) எய்கின்ற வில்லினை யுடைய, மற்பொருவு - மற்போர் செய்வதில் வல்ல, தோள் இருவர் - புயங்களையுடைய அவ் இராமலக்குமணரிருவர், மெய் வரத்தினன் - (இவ்வரக்கன்) பொய்த்தலில்லாத வரம் பெற்றவன், மிடல்படைவிட - வலிமையுற்ற ஆயுதங்களைப் பிரயோகிப்பதினால், படுகிலன் - மாள்பவனல்லன், மற்றும் இகல் செய்யும் - திரும்பவும் போர் செய்வான், என்ற - என்பதாயோசித்து, சினவாள் உருவி - சீற்றமுள்ள வாளை உறையினின்றெடுத்து, வல்கை துணித்தும என - (இவனது) வலியகைகளை வெட்டிவிடுவோமென, முந்துகடுகி - மிகவும் விரைந்து, படர்புயத்து - அகன்ற (அவனது) தோள்கள் மீது, ஏற - ஏறிக்கொள்ள, நிருதன் - அரக்கன்.

குறிப்பு:— மெய்வரம் - தவறாது பலிக்கின்றவரம். 'சினவாள்' என்பதிலுள்ள சினம் என்னும் சிறப்பு அவ்வாளுடையவனைச் சார்ந்து நின்றது. எய்வில் - வினைத்தொகை நிலைத்தொடர். இருவரும என்பதிலுள்ள முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

15. (ப-ரை) மேருவினை - மேருமலையை, நாடோறும் - தினந்தோறும், வந்துவலஞ்செய்து - வந்துபிரதட்சணஞ்செய்து, உழல்வோர் - சுற்றித்திரிவோரான, இந்து - சந்திரனையும், சூரியன் - சூரியனையும், ஒத்து - சமானமுற்று, இருவரும் - ஸ்ரீராமலக்ஷ்மணரிருவர்களும், பொலிய - (இரண்டு புயங்களிலும்) நின்று நிலவ, மூந்து - உயர்ந்த, வான்முகடு - வானத்தின் உச்சியை, உற - அளாவும்படி, முட்டி - மோதி, சிந்துசோரியொடு - (பெருகி) வழியும் இரத்தத்துடன், கடிது முடுகி - மிகவும் விரைந்து, சாரிகை திரிந்தனன் - (அவ்வரக்கன் ஸ்ரீராமலக்ஷ்மணருடன்) வலசாரி இடசாரியாய்ச் சுற்றினன்

குறிப்பு:—அரோ - தனி நிரப்பவந்த சொல்லசை. ஏகாரம் ஈற்றசை. அரக்கனை மேருமலைக்கும ஸ்ரீராமலக்ஷ்மணரைச சந்திர சூரியர்களுக்கும் உவமை கூறியது அரக்கனது பருமனையும் ஸ்ரீராமலக்ஷ்மணரது அழகு குணங்களையும் விசேடித்து நின்றது. சந்திர சூரியர் - உம்மைத்தொகை.

16. (ப-ரை) சுவணவண்ணனொடு - பொன் நிறத்தையுடைய லக்ஷ்மணனுடன், கண்ணன் - ஸ்ரீராமன், உறை - எழுந்தருளியிருக்கின்ற, தோளன்- புயங்களோடு கூடியவனாய், விசைதோய் - வலிசெறிந்த, அவண விண்ணிடை - அந்த அழகிய ஆகாயத்தினிடை, திரிந்து - எழுந்து, படர்கின்றவன் - செல்லுகின்ற அவ் அரக்கன், அறம் - தர்மம், சிவணது அன்ன - வடிவெடுத்தாற்போன்ற, சிறை - (தன்) சிறகுகளில், முன்னவரோடு - தன் தமையனமாராகிய ராகுகேதுககளோடு, எகுசெலவத்து - செல்லுகின்ற போக்கோடு கூடிய, உவணன் என்னும் - கருடன் என்கின்ற, நெடுமன்னவனும் ஒத்தனன் - (பராக்கிரமமுற்ற) பக்ஷிராஜனையும் ஒத்து விளங்கினன்.

குறிப்பு:— ஸ்ரீராமபிரான் திருமேனி நீலவண்ணமாகவே 'கண்ணன்' என்ற பெயர் இங்கு அப்பிரானைக் குறித்து நின்றது. கண்ணன் - கிருஷ்ணன் என்பதின் சிதைவு. கிருஷ்ணன் - நீலநிறத்தோடு கூடியவன். அவ்வண்ண விண் என்பது 'அவணவிண்' என ஒற்றுக்கள் தொக்கது செய்யுள் விகாரம்; அவண - அங்கிருந்தபடி எனினும் பொருந்தும். அங்கனமாயின் தோய்ந்து என்பது தோய் எனப்பகுதியளவாய் நின்று இறந்தகால வினையெச்சப் பொருள் தந்ததெனக் கொள்க. செலவு + அத்து-இதிலுள்ள அத்து சாரியை கருடபகவானும் அவரது தாயும் ஓர் சபதத்தை முன்னிட்டுக் கத்துரு என்பாளுக்கு அடிமையாயிருந்த காலத்தில் கத்துருவின் மக்களான ராகுகேதுக்களை அவர் சுமந்துகொண்டு திரிந்த கதையைப் பற்றி ஆழ்வார் இவ உவமை கூறினர். 'அறஞ்சிவணதன்னசிறை' என்று சிறகுகளைச் சிறப்பித்தாங்கே 'கருடபகவான் தரும சொரூபி' என்றார்.

17. (ப-ரை) குலசீதை - உயர்குலத்திற் பிறந்த சீதாபிராட்டி, மா - பெருமை தங்கிய, தயாவுடைய - தயாளகுணமுடைய, தன்கணவன்

தனது நாயகனாகிய 'ஸ்ரீராமன்' வஞ்சன் - வஞ்சகத்தன்மையோடு கூடிய (விராதனது), வினையின் - கொடிய செயலினால், போதலோடும் - (ஆகாய மார்க்கமாய்த் தன்னை விட்டுச) செல்லுகின்ற போழ்து, அலமந்தனள் - மனது சோர்ந்தவளாகி, புலர்ந்து - வாட்டமுற்று, சேவல் பிடியுண்ட - ஆணன்னம் (பிறரால்) பிடிக்கப்பட்ட போழ்து (வருந்தும்), சிறையன்ன மனையாள் - சிறகுகளையுடைய (பெண்) அன்னத்தைப் போன்றவளாகி, ஒசி கொம்பென - துவண்டு சாய்கின்ற பூங்கொம்பே என, கோதை யோடும் - (தனது) கூந்தலோடும், பொடியில் வீழ்ந்தனள் - புழுதி முதலியன (செறிந்துள்ள) பூமியில் விழுந்தனள்.

குறிப்பு:— கணவன் - தன் கண்ணுள் வைத்துப் போற்றப்படுபவன். தயா - வடசொல். சீதை - சீதா என்னும் வடசொல்லின் திரிபு, 'சேவல்' என்பது ஆண் பறவையின் பொதுப் பெயரெனினும் "சீதை சிறை யன்னமனையாள்" என்ற சொல்லாற்றலால் அது 'ஆண் அன்னம்' என்ற பொருள் பெற்றது. ஆணன்னத்திற்குச சேவல் என்பதும் ஆன்றோர் வழக்கு. சீதை என்பதற்கு உழவுசாலில் அகப்பட்ட பெண் என்பது பொருளாகவே 'ஒரு தாயில்லாப் பெண் தன் கணவனையும் பிரிந்து தரையில் வீழ்ந்தாள்' என்னுங்கருத்தமையவே ஆழ்வார் இங்குச 'சீதை' என்றதிருநாமத்தைப் பிரயோகித்தார்.

18. (ப-ரை) மதநல்யானை - மதம் பெற்ற சிறந்த யானையை, அனையான் - நிகர்த்த லக்குமணன், நிலம் வகிர்ந்த - பூமியில் வெட்டியெடுத்த, குழிவாய் - குழியினிடத்து, நதம் உலாவும் - ஆற்றின் கண் ஓடுகின்ற, நளி நீர்வயின் - மிக்கநீரினிடத்து, அழுந்த - அழுந்தும் படி, அமலன்- மலபந்தமற்றவனாகிய ஸ்ரீராமபிரான், நவைதீர் - குற்றம்நீங்கிய, அதவம் ஆய் - நெய்த்துடுப்பாய், நறுநெய் உண்டு - சுத்தமான (பசுவின்) நெய்யை அருந்தி, உலகின்பர் - உலகத்திலுள்ள பக்தாகள், கருதிற்றுஉதவு - எண்ணியவைகளைத்தருகின்ற, சேவடியினால் - திருவடியினால், உந்துதலும் - அவ்வரக்கனை உதைத்துத தள்ளின உடனே.

குறிப்பு:— வாய், வயின் - என்பன இடப்பொருள் பற்றிவந்த எழுனுருபு. நதம் - கிழக்குத்திசையிலிருந்து மேற்குத்திசை செல்லுகின்ற ஆறு; இதனை 'ஆண் ஆறு' என்றும், மேற்கிலிருந்து கிழக்குமுகம் செல்லுகின்ற ஆற்றை 'நதி' என்றும பெண்ணாறு என்றும் சொல்லுவர். நளி - மிக்க என்னும் பொருள் பற்றி வந்த உரிசசொல். அதவம் - அத்திக்கட்டையினாற் செய்த நெய்யகப்பை. கருதிற்று - இது ஒருமையீறுபெற்றுக் கருதியவை எனப் பன்மைப் பொருளுணர்த்திற்று; இதைச 'சாதியொருமை' என்பர்.

19. (பரை) விரிஞ்சன் என - பிரமதேவனாகி, ஓர்முட்டைதந்து - ஒப்பில்லாத அண்டத்தைப் படைத்து, அதனில் வந்த - அவ்அண்டத்தின் கண்ணே (ரட்சித்தல் பொருட்டு) அவதாரஞ்செய்த, முதல்முன்ன

வனின் - ஆதி முதல்வனாகிய ஸ்ரீராமபிரானால், முன்படர்சாபமிட - முற் காலத்தில் (குபேரன்) சாபத்தைக் கொடுத்ததினால், வல்பிறவி கட்டம் (வந்த) வலிய பிறவித் துன்பங்களை, தந்த - கொடுத்த, கடையான உடல் விட்டு-இழிவான (ராட்சஸசரீரத்தை) விட்டு, தான் - (மேலேசென்ற) அவ் வரக்கன், பட்டதன்மையும் உணர்ந்து - முன் நடந்துள்ள செய்கைகளை (த்யானத்தினால்) அறிந்து, விண்இடை விளங்கினான் - ஆகாயத்தின் கண்ணே (ஏற்பட்ட) கந்தருவசரீரத்தோடு தோன்றினான்.

குறிப்பு:— முதல்முன்னவன் - முதல்வராகிய 'பிரமவிஷ்ணு ருத்திரர் கள்' என்ற மும்மூர்த்திகளுமாய் அவர்களுக்கும் ஒரு மூலமான சர்வேசுவ ரன்; "மூவராய் அம்மூவருள்ளும் முதல்வனும் மூரிநீர்வண்ணன்" என்ற படி. படர் சாபம் - வினைத்தொகை. இல் = இது மூன்றும் வேற்றுமை யுரு பாகிய ஆல் உருபுப் பொருள் தந்து நின்றது. ஏகாரம்-ஈற்றசை.

20. (ப-ரை) பிறிவு இல் - நீங்குதல் இல்லாத, தனி - ஒப்பற்ற, அன்பு பண்டு உடைய - பழமையாய உண்டான அன்பாகிய, பெறற்கு அனினும் - உயர்வினையையும், அறிவு வந்து உதவ - தத்துவஞானம் வந்து கூட - பொறியில் ஒன்றி - பஞ்சேந்திரியங்களில் ஈடுபட்டு, அயல்சென்று - விஷ யாந்திரங்களிலே நுழைந்து, திரிபுந்தி - அலைகின்ற புத்தியை, உணரான் - சாராதவனாகி, நெறியில் ஒன்றி - நல் வழிப்பட்டு, நிலைநின்ற - நிலைபெற்றி ருக்கிற, நினைவு - பூர்வஞானம், உண்டதனினும் - உண்டாகியதனாலும், நம் பனை - (அதனால்) நமபி என்னும் ஸ்ரீராமபிரானை, அறிந்து பகர்வான் - ஸ்ரீமகாவிஷ்ணுவின் அம்சமென்று தெரிந்து கொண்டு துதிப்பானாகினான்.

குறிப்பு:— அயல் - இது உலகவிஷயங்களைக் குறித்து நின்றமையால் ஆகுபெயர். திரிபுந்தி - வினைத்தொகை 'உணரான்' என்பது சாராதவன்; அதாவது:- விட்டு நீங்கியவனாகி என்னும் பொருளில் வந்தது. 'பொறிவாயி லைந்தவித்தான்' என்றபடி. பொறி - மெய் வாய் கண் மூக்கு செவி. இத னைப் பஞ்சேந்திரியமென்பர். பிரி, பிறி என்பன ஒரு பொருட் சொற்கள் ஆதலானும் ஆன்றோர்கள் எடுத்தாண்டியிருப்பதினாலும் இதை எதுகை நோக்கித்திரிந்ததென்று கொள்ளுதல் கூடாது.

21. (ப-ரை) வேதங்கள் அறைகின்ற - வேதங்கள் எல்லாம் துதி கின்ற, உன் பாதங்கள் இவை - இந்த உன்னுடைய பாதங்கள், உலகு எங் கினும் - எல்லா உலகங்களிலும், விரிந்தன எனின் - பரந்திருக்கின்றன என்றால், படிவங்கள் - (மற்றைத்) திருவுருவங்கள், எப்படியோ - எத்தன் மை யுடையனவோ, ஓதம்கொள் - குளிர்ச்சி தங்கிய, கடலன்றி - கடல் மாத்திரமே அல்லாமல், ஒன்றினோடு ஒன்று ஒவ்வா - ஒன்றோடொன்று (தம்முள்) ஒத்து இராத, பூதங்கள் தொறும் - ஐந்து பூதங்களிலும், உறைந் தால் - (நீ) தங்கினால், அவை - அப்பூதங்கள், உன்னைப் பொறுக்குமோ - உன்னைத்தாங்கிக் கொள்ள முடியுமோ? (முடியாது என்றபடி)

குறிப்பு:— எம்பெருமானது திருவடிகளின் மகிமைகளை மாத்திரமே வேதங்கள் கூறுகின்றபடியால் "வேதங்கள் அறைகின்ற உன் பாதங்கள்" என்றார் ஓதங்கொள்கடல் - நீரும் அலையும் நிறைந்த கடல் எனினும் பொருந்தும். "சர்வஅண்டங்களையும் பரமசக்தியால் தாங்குகின்ற நீ ஐம்பூதங்களிலும் நிறைந்து நிற்கின்றாய்" என்பது தோன்ற " பூதங்கள் தொறுமுறைந்தால் அவையுன்னைப் பொறுக்குமோ" என்றார். தொறும் - எஞ்சாப் பொருளுணர நின்று ஏழாம் வேற்றுமையிற் பயின்றுவருவதோர் இடைச்சொல். பிருதிவி: நிலையாயிருத்தலும், அப்பு: கீழ்நோக்கிப் பாய்தலும், தேயு: மேல்நோக்கிப்பாய்தலும், வாயு: எல்லாத்திசையும் பரவி வீசுதலும், ஆகாயம்: எங்கும்விரவி இருத்தலும் 'சடம், குளிர், சூடு, பரிசம் சப்தம்' முதலிய குணவேறுபாடுகளை உடைத்ததாயிருத்தலும் பற்றி " ஒன்றிேனுடொன்றொவ்வாப் பூதங்கள் " என்றார். இப்பாட்டினால் "அந்தர்யாமி, சர்வவியாபி, சர்வசக்தி, சர்வாதாரம் பரத்துவம் முதலிய திவ்யகுணங்கள் அனைத்தையும் உடைய ஒருவன் ஸ்ரீராமபிரான் என்பது பெறப்பட்டது.

22. (ப-ரை) கடுத்த - கோபித்த, கராம் - முதலை, கதுவ - பாதத்தைக் கௌவிக்கொள்ள, உறுதுயரால் - உண்டான துன்பத்தினால், ஒரு வாரணம் - ஒப்பற்ற (கஜேந்திரன் என்ற) யானையானது, நிமிர்கை - எடுத்து - நீண்ட தனது துதிக்கையை மேலே தூக்கி, மெய்கலங்கி - உடல் தளர்ந்து, உடுத்ததிசை - சூழ்ந்திருக்கின்ற திக்குகள், அனைத்தினும் - எல்லாவற்றினும், ஒலிசென்று கொள்ள - பேரொலியானதுபரவிப்போய்ச் சப்திக்க, அடுத்த - பொருந்திய, பெருந்தனிமூலத்து - பெரிய நிகரற்ற ஆதி காரணமான, அரும்பரமே - அரியபரம்பொருளே, பரமே - பரம்பொருளே, என்று-என்று(பலமுறை)சொல்லி, எடுத்து அழைப்ப - சத்தமிட்டுக் கூப்பிட, நீயோ அன்று - நீயல்லவா அப்போது, ஏன் என்றாய் - ஏன் என்று (ஓடி அதன் துன்பத்தைத் தீர்த்தாய்.)

குறிப்பு:— கராம் - ஆண்முதலை. தானிருந்தஇடத்தை யானை கலக்கிட அம்முதலைக்குக் கோபம் மூண்டது பற்றி அதனைக் 'கடுத்தகராம்' என்றார் 'கதுவ' என்னும் செயவெனெச்சம் இங்கே இறந்தகாலத்தைஉணர்த்திநின்றது. 'பரமேபரமே' என்றது பக்திமேலீட்டினால் அன்பு பற்றி வந்த அடுக்கு. விலங்கினமாயிருந்துங்கூட அதற்குப் பக்தி ஏற்பட்ட தன்மையை விசேஷித்துக்காட்டவே ஆசிரியர் 'ஒருவாரணம்' என்று சுட்டினார். நீயோ என்பதினீற்றிலுள்ள ஓகாரம், 'அரன் முதலியவர்கள் இருந்துங்கூட வந்து காத்தவன்நீ' என்ற பொருள்பற்றிவந்த பிரிநிலைப்பொருளது

23. (ப-ரை) புறம்காண - புறமாகிய ஊனக்கண்ணால் காணவும், அகங்காண - அகமாகிய ஞானக்கண்ணால் காணவும், பொது முகத்தின் - இவ்விரண்டிற்கும் பொதுவான, அருள்நோக்கம் - அருட்பார்வை, இறங்காத - தணியாத, தாமரைக்கண்எம்பெருமான் - தாமரைமலர்போன்ற

திருக்கண்களையுடைய எமது பெருமானே!, நீயேயோ - நீதானோ, அறங் காத்தற்கு - தருமத்தைக் காக்கும் பொருட்டு, உனக்கொருவர் - உனக்காகப் பிறரொருவர், யாருமொருதுணையின்றி - எவரொருவருந்துணையில்லாமல், கறங்காகுமெனத்திரிய - காற்றாடி என்றுசொல்லும்படி அலைய, கடவாய் - கடமைப்பட்டவனாயிருக்கிறாய், இயம்புதி - சொல்வாயாக.

குறிப்பு:—'புறம் - அகம்' என்பன ஊனக்கண்ணுக்கும் ஞானக்கண்ணுக்கும் ஆகுபெயராயிற்று. 'நோக்கம்' என்ற கருவிப்பெயர் இங்குத் தொழிற்பெயராய் வந்து நின்றது. தாமரை - இது முதலாகுபெயராய் அதன் மலரைக் குறித்தது. ஞானக்கண்ணாலன்றிக் காணுதற்கொண்ணாத அதீந்திரியமாயிருக்கின்ற அவனே ஸ்ரீ ராமபிரானாக அவதாரம்பண்ணி ஊனக்கண்ணுக்கும் புலப்படுகின்றமை பற்றியும் தான் முதலில ஊனக்கண்ணாற் கண்டு 'இவனொரு மானுடன்' என்று அலட்சியம்பண்ணிப் பின்னர் ஞானக்கண்ணால் கண்டு 'சர்வாண்டவஸ்து இவனே' என்று தெரிந்துகொண்டமை பற்றியும் தெள்ளிதிற் புலனாக்கவே 'புறங்காண அகங்காண' என்று விசேடித்தார். ஆல் தான் என்பன சந்தவின்பம் பற்றிவந்த அசைகள்.

24. (ப-ரை) இறப்பதே பிறப்பதே எனும் - இறத்தலும் பிறத்தலும் என்கின்ற, விளையாட்டு - திருவிளையாட்டை, இனிதுகந்தோய் - (திருவுள்ளம் மகிழ்ந்து) புரிபவனே! இறப்பதே தொழிலாக - (பற்றற்றுத் துறவியாதலையே) தொழிலாகக் 'கொண்டு' தோன்றினோர் - பிறந்த மேலோர்கள், தோன்றியக்கால் - பிறவி பெற்றாலும், மறப்பரோ தம்மை - (தமது) முன்னைய நிலையை மறப்பார்களா? (மறவார்.) அஃதன்று ஆகில் - அதுவுமன்றி, மற்றவர்போல்பிறப்பரோ - ஏனைசாமானியர்கள் போன்று பிறப்பரோ? (பிறவார்) எவர்க்கும் - (இத்தகையார்) எவர்களுக்கும், தாம்பெற்ற பதம் பெறலரிதோ - தாம் முன்னடைந்துள்ள மேற்பதவியைப் பெறுதல் அரிதாகுமோ (அரியதில்லை) என்றபடி.

குறிப்பு:—'லோக சம்ரட்சணார்த்தமாக இங்ஙனம் திரு அவதாரமாதலைப் பகவான் ஒரு லீலையாகக் கொண்டிருக்கின்றான்' என்பதுபற்றியும், பிறப்பிறப்பினால் ஏற்படுகிற இன்பதுன்ப பாசபந்த மல முதலியன அவனைச்சாராதென்பது பற்றியும் 'இறப்பதே பிறப்பதே எனும விளையாட்டினினிதுகந்தோய்' என்றார். 'அவதாரங்களினால் பகவானுக்குப் பரத்துவம் இல்லை, யென்று சாதித்தல் அஞ்ஞானம் என்றபடி. தோன்றியக்கால் - காலீற்றெதிர்கால வினையெச்சம். இச்செய்யுளின்கண் வந்துள்ள ஓகாரங்கள் மூன்றும் எதிர்மறைப் பொருளில் வந்தன. 'இறப்பதே - பிறப்பதே' இதிலுள்ள ஏகாரங்கள் தேற்றப்பொருளன

25. (ப-ரை) பணிநின்ற - அசசத்தையே தரும்படி நின்ற, பிறவிப்பெருங்கடல் - பிறப்பிறப்பென்று சொல்லுகின்ற பெரிய கடலை, கடக்

கும்படி - (நீந்தித்) தாண்டும்படி பற்றி - (தெப்பமாகக்) கொண்டு, தனி நின்ற - மிகுதிபெற்று நின்ற, சமயத்தோரெல்லாரும் - சமயக்கோட்பாடு டையார் எல்லாரும், நன்று என்ன - (கடைத்தேறுதற்கு) இது நல்ல உபாயமென்று எண்ணும்படி, தனிநின்ற - (ஓர்) ஒப்பற்று நின்ற, தத்துவத்தின் தகைமூர்த்தி - தத்துவஸ்வரூபவஸ்து, நீயாகின் - நீயாகவே நிற்பாயானால், இனி நின்ற முதல்தேவர் - அந்தந்த சமயங்களுக்குத் தலைவராயநின்ற மற்றைத்தேவர்கள், என்கொண்டு - என்ன பெருமையைக்கொண்டு, என்செய்வாரே - என்ன காரியங்களைச் செய்யக் கூடியவராவர்?

குறிப்பு:—சமயம் - மதம். ஆகின் என்ற எதிர்கால வினையெச்சம் துணிவுப்பொருளைத் தந்துநிற்கிறது. என்ன என்னும் வினாவினைக்குறிப்பு என் என விகாரப்பட்டது. 'தத்துவத்தின் தகைமூர்த்தி' என்றது கன்மேந்திரியம் ஞானேந்திரியம் தன்மாத்திரை, பூதம் ஜீவன் முதலியவற்றிற்கோர் ஈஸ்வரனாய் நிற்பவன் ஸ்ரீராமபிரான், என்பதைக் குறித்தது. 'பிறப்பிறப்பினுக்கோர் இறுதிகாணுதல் அரிதாகவே அதனைப் பெருங்கடல் என்றார்.

26. (ப-ரை) தனி - ஒப்பில்லாத, தருமத்தின் மூர்த்தி - தரும ஸ்வரூபியானவனே! ஓயாத - ஒழிதலில்லாத, மலரயனே முதலாக - (நாபிக்) கமலத்திலுதித்த பிரமன்முதலாக, உளராகி - உள்ளவர்கள் ஆகி, மாயாத - அழிதலில்லாத, வானவர்க்கும் - தேவர்களுக்கும், ஒழிந்த - அவர்கள் நீங்கலான, மற்றுமன்னுயிர்க்கும் - மற்றைய ஜீவாத்மாக்களுக்கும், முதல்தாதை - முதலானதந்தை, நீயாகில் - நீயானால், நெறிமுறையால் - உலக வழக்கப்படி, ஈன்றெடுத்த - (இவர்களைப்) பெற்று வளர்த்த, தாயாவார் - தாயாகுவார், யாவரே - வேறு எவர்? (அத்தாயும் நீயே என்றபடி)

குறிப்பு:—'கற்பங்கள் தோறும் பிரமன் முதலியோர் அழிந்து பின் உயிர்ப்பதுபற்றியும்' படைப்புத் தொழிலில் அவனுக்கு ஒழிவில்லாதுபற்றியும் 'ஓயாத மலரயன' என்றார். தோற்றத் தொடக்கத்தில் பிரமனே முதலானவன் என்பது தோன்ற 'மலரயனே' முதலாக என்றார். தேவர்களுக்கும் மரணமுண்டு என்றாலும் மற்றைப் பிறவிகளைப்போலன்றி அவர்கள் நெடுங்கால வாழ்வுடையாராயதுபற்றி 'மாயாத' என்ற சிறப்படை வைத்து அவ்வேறுபாடு விளக்கினார். தத்தம் கன்மபலம் காரணமாக எடுத்த சரீரம் அழிந்து தான் அழியாதுநிற்றலால் ஆன்மாவை 'மன்னுயிர்' என்றார். 'முதலவன்ஆகிய பிரமனையும் படைத்தவன் ஸ்ரீ ராமபிரானே' என்பது தோன்ற 'முதல்' தாதை என்றார். 'தாயாவார் யாவரே' என்ற சொல்லாற்றலால் ஆசிரியர் 'ஆணும்; நீ பெண்ணும் நீ அலியும்நீ' நீயன்றி ஒருவருமில்லை; என்ற பொருள் துலங்கவைத்தார். யாவரே - இதிலுள்ள ஏகாரம் 'புதியன புகுதல்' என்றபடி எதிர்மறைப் பொருளது. தனிமூர்த்தி - அண்மைவிளி.

27. (ப-ரை) நீயாதிபரம்பரமும் - முதன்மையான பரம்பர வஸ்துவும் நீதான், உலகங்கள் நின்னவே - எல்லா உலகங்களும் உன்னுடையவே,

ஆயாத சமயமும் - (ஆய்ந்து ஆய்ந்து பார்த்தும்) அறிதற்கருமையாய பற்பல சமயங்களும், நின் அடியவே - உனது பாதங்களைப் பற்றியனவே, அயல் இல்லை - (நீயன்றி) வேறில்லை, நீயாரின் ஒளித்தி - (ஆனால்) என்போன்ற நீயவர்களுக்கு நீ உனது எதார்த்த ரூபத்தை ஒளித்திருக்கின்றாய், வெளிநின்றால் - (அவ்வாறு ஒளியாது நீ) வெளிப்பட்டு நின்றால், நீங்குண்டோ - (அதில் உனக்கு ஏதேனும்) நீங்கு பற்றுமோ, ஏயாத - அழிதலில்லாத, பெருமாயை விளையாட்டும் - பெரிய மாயைத் திருவிளையாட்டும் வேண்டுமோ - (உனக்கு) வேண்டியதாயிருக்கிறதோ, (இல்லையென்றபடி)

குறிப்பு:—சமயங்கள்தோறும் அவ்வத் தெய்வங்களாய் நின்று அவர்கள் செய்கிற வந்தன உபசாரங்கள் முதலியன ஸ்ரீ ராமபிரானையே சாருகின்றபடியால் 'சமயமும் நின் அடியவே' என்றார். காணத்தக்க உலகினைக் கொண்டு காண்பதற்கரிதாய பரம்பொருளைக் காணவேண்டியிருப்பதால 'நின்னவே உலகங்கள்' என்றார். 'நீயாரின் ஒளித்தி' என்பதற்கு வஞ்சகமாக நீயுனது எதார்த்த ரூபத்தை ஒளித்திருக்கின்றாய் எனவும் பொருள் கொள்ளலாம். அடியவே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. ஆல் - தளை நிரப்பவந்த அசையாயிற்று.

28. (ப-ரை) ஐய - ஐயனே, வாராதே வரவல்லாய் - (அடியார் பொருட்டு) வருவதற்கரியானாய் நின்று பின்னர் மிக்க எளிமையாய் வரத்தக்க தன்மையுடையானே!, தாய் தன்னையறியாத கன்றில்லை - தனனையீன்ற தாயை அறிந்துகொள்ளாத கன்றில்லை, தன கன்றை ஆயும் அறியும் - தான் ஈன்ற கன்றை அதன தாயும் அறிந்துகொள்ளும், (ஆனால்) உலகின் தாய் ஆகிய - (நீ) எல்லா உலகினுக்கும் தாயானால், நீ எப்பொருளும் அறிதி - நீ எல்லாப் பொருள்களையும் அறிகின்றாய், அவை - அப் பொருள்கள், உன்னை நிலையறியா - உன்னை இன்ன தன்மையான் என்று அறிந்து கொள்ளமாட்டா, மாயையிது வென்கொலோ - (இப்படியானால்) இந்த மாயை எத்தகைமை யுடையதோ! (தெரியவில்லை என்றபடி)

குறிப்பு:—கன்று தன் தாயையும் தாய் தனகன்றையும் அறிந்துகொள்ளுகிற அன்பு மிகுதி ஆவினங்களுக்கே அதிக மென்பது பற்றிக் கன்றெனபதை ஈண்டுப் பசுவின்கன்றென்றும, 'கன்று' என்று கூறினமையாலேயே 'தாய்ஆய்' என்பன பசுவென்றுங் குறித்தனெனக்கொள்க. உலகின் தாய் - உலகுக்கு இனிய தாயெனப் பிரித்துப பொருள கொள்ளவும பொருந்தும். 'ஆகின்' என்பது துணிவுப் பொருளில் வந்தது. அறிதி - அறி= பகுதி; த்= எழுத்துப் பேறு; இ= முன்னிலை யொருமை வினைமுற்று விகுதி; அறிகின்றாய என்பது பொருள. கொல்-ஆச்சரியம்பற்றி வந்த அசை. 'தாய் கன்றையறிவதுபோல்' நீ எப்பொருளையும் அறிகின்றாய. கன்று தாயை அறிவதுபோல் அப்பொருள்கள உன்னை அறிய முடியவில்லை என்பது தோன்ற 'மாயையிதுவென்கொலோ'' என்றார் ஆசிரியர்.

29. (ப-ரை) உலகம் - உலகமானது, பன்னலாம் என்று - துதிக்கலாம் என்று, பலபலவும் - பல பல தெய்வங்களையும், நினையும் - நினைக்கும் (ஆனாலும்) உன்னலால் - உன்னை யல்லாமல், பெருந் தெய்வம் (வேறொரு) சிறந்த தெய்வம், உயர்ந்தோர் - (உண்டென்பது) உயர்ந்தோர்களது, ஒழுக்கன்றே - ஒழுக்கமாகாது, அன்னம்ஊர்தியை - அன்ன வாகனமாகக் கொண்ட பிரமனை, முதலாம் - முதலாக உடைய, அந்தணர் மாட்டு - மேலோர்களால் (ஆராதிக்கத்தக்க), அருந் தெய்வம் - (ஒப்பற்ற, அரியதெய்வம், நின்அல்லால் இல்லாமை - நின்னையல்லால்வேறுஇல்லாமையை, நெறி நின்றார் - சாஸ்திர முறையில் நின்ற மேலோர்கள், நினையாரோ - ஆராய்ந்துணராரோ (உணர்வார்) என்றபடி.

குறிப்பு:—'தெய்வம + உயர்ந்தோரா' என்ற சொற்களுக்கிடையில் 'உண்டென்பது' என்ற சொல் தொகுத்தல்: இதனைச் சொல்லெச்சம் என்பர். உலகம் என்பது உலகத்திலுள்ள பிறப்புக்களைக் குறித்ததால் இது இடவாகு பெயராயிற்று நினைக்கும் என்பது நினையும் என வந்தது; நினை - பகுதி; உம் - வினை முற்று விகுதி. ஊர்தி - ஊரப்படுவது. அந்தணர் என்பது பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களின் பெயராயதுபற்றி "அன்ன ஊர்தியை முதலாமந்தணர்" என்றார். அம் மூர்த்திகளைப் பற்றிப்பேசுகிற வேதமுறையில் ஒழுகுபவருக்கும் இப்பெயர் வந்தது. அந்தணர் - அந்தத்தை அணவுவோர்: அணவுதல் - கிட்டுதல். ஒழுக்கு - முதனிலை திரிந்த தொழிற் பெயர். மாட்டு - இது ஆல உருபுப்பொருள் தந்து நின்றது.

30. (ப-ரை) திரு - இலக்குமிதேவி, உறையும் - வீற்றிருக்கின்ற அணி - அழகிய, மார்ப - மார்பினையுடையவனே!, உறங்காதாய் - அழியாதவனே, பொருவு அரிய சமயங்கள் - ஒப்பிட்டுச் சொல்ல முடியாத பல சமயங்கள், புகல்கின்றபுத்தேளிர் - 'தத்தம் தெய்வமென்று' சிறப்பித்துக் கூறுகின்ற தேவர்கள், இருவினையும்உடையார் போல் - (நலவினை தீவினை என்ற) இரண்டு வினைகளையும் உடையவர்களைப் போன்று, அருந்தவம் - அரிய தவத்தை, நின்று இயற்றுவர் - செய்து நிற்பார்கள், நினக்கு என்னை செயற் பால - உனக்குச் செய்யவேண்டிய காரியங்கள் என்ன இருக்கின்றன, (ஒன்று மில்லை.) ஒரு வினையு மில்லார் போல் - (ஆகையால்) வினை ஒன்றும் இல்லாதவரைப் போல்' உறங்குதி - (நீ) நித்திரை செய்தருளுகின்றாய்.

குறிப்பு:—எல்லாச் செல்வங்களுக்கும் அதிதேவதை இலக்குமியாயது பற்றித் திரு என்பது இலக்குமியைக் குறித்தது. இரு வினை - நலவினை தீவினை. இருவினையும் இதில் உள்ள உம்மை முற்றும்மை. பால - பால், பகுதி; அ - பலவின்பாற் படர்க்கை விகுதி. 'உறங்குதியால் உறங்காதாய்' என்ற சொல்லாற்றலினால் நீ பன்னகத்தின்மீது பள்ளிகொண்டிருப்பினும் அதன்மீது அறிதுயில்கொள்பவனேயன்றி மற்றைத் தேவரைப்போன்று உறங்குகிறவன் அல்லன் என்ற பொருள் தருகின்றது. ஆல்-தனிநிரப்பசை.

31. (ப-ரை) திருவான - அழகுதங்கிய, நிலமகளை - பூமிதேவியை, அரவு ஆகி - ஆதிசேஷனாகி, சுமத்தி - (நீ) சுமந்து தாங்குகின்றாய், அயில் எயிற்றின் - கூர்மைபெற்ற கொம்பினால், ஏந்துதி - எடுக்கின்றாய், ஒரு வாயின் - ஒரு வாயினாலே, விழுங்குதி - விழுங்குகின்றாய், ஓர் அடியான் ஒளித்தி - ஒரு திருவடியினாலே மறைக்கின்றாய், இஃது - இந்தவண்ணம் அவளிடத்தில் அன்புகொண்டொழுகுதலை, மரு ஆரும் துழாய் அலங்கல் - வாசனை தங்கிய துளபமாலையணிந்த, மணிமார்பின் வைகுவாள் - அழகிய மார்பினிடத்திருக்கின்ற திருமகள், அறிந்தால் சீறாளோ - அறிந்துகொள்வாளானால் கோபிக்கமாட்டாளோ (ஊடல் பெறாளோ என்றபடி)

குறிப்பு:—பூமிதேவியை ஆதிசேஷரூபமாய்ச் சுமந்தும் வராகரூபமாய் ஏந்தியும் வாமனரூபமாய்த் திருவடியில் அளந்து மறைத்தும் பிரளய காலத்து ஒரு கவளமாயுண்டும் சிருஷ்டிகாலத்து உமிழ்ந்தும் ஆடுகிற திருவிளையாட்டினை இக்கவியில்நுலக்கினார். அலங்கல் - இது தொழிலாகு பெயராய்மாலையைக்குறித்தது. துழாய் - துளஸீஎன்னும் வடசொற்சிதைவு.

32. (ப-ரை) ஐயா - யாவர்க்கும் தலைவனே, நீ விதித்த மன்னுயிர்கள் - நீ படைத்த நிலைபேறுடைய ஆன்மாக்கள், மெய்யைத்தான் - (பரத்துவம் நீ என்கிற) உண்மையைத்தான், சிறிதுணர்ந்து - சிறிதளவாயினும் தெரிந்து, உய்யத்தான் ஆகாதோ - (பிறப்பிறப்பென்ற பெருந்துன்பக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டு) ஜீவிக்கலாகாதோ, உனக்கென்ன குறைவுண்டோ - ஆன்மாக்கள் (அங்ஙனம் உஜ்ஜீவிப்பதால்) உனக்கு ஏதாவது குறைவுசேருமோ, (சேராதே) மழுவாளிக்கு - மழுவேந்திய பரமசிவனுக்கு, அன்று அளித்த ஐயத்தால் - (பிரமகபாலத்தை ஏந்திப் பிச்சைபெற்றுத் திரிந்த அந்தக்காலத்தில்) நீ கொடுத்தருளிய பிச்சையினால், சிறுது ஐயந் தவிர்ந்தாரும் - சிறிதளவு சந்தேகம் நீங்கப்பெற்றவர்களும், வையத்தார் - இவ்வுலகத்தாருள்ளும், வானத்தார் - அவ்வுலகத்தாருள்ளும், உளர் - உள்ளார்.

குறிப்பு:—உன்னாற் படைக்கப்பட்ட ஆன்மாக்கள் எல்லாம் உன்னை அறிந்து உன்னுள் ஐக்கியநிலையடையாவண்ணம மாயை என்ற ஒரு பெரிய வலையை நீயே படைத்திருக்கின்றாயென்றும அவ்வாறு மாயையைநீ படைக்காவிடில் 'படைத்தல் காத்தல் அழித்தல்' என்ற திருவிளையாட்டே உனக்கில்லாமற் போய்விடுமென்றும் அவரவர்கள் கன்மானுபவததுக்குத் தக்கபடியேதான் படிப்படியாய் உன்னையறிந்து உன்னுள் ஐக்கியம் பெறக்கூடுமென்றும் அவ்வாறு ஐக்கியம்பெற்றவர்கள் வையகத்தாரிலும் வானகத்தாரிலும் சிலர் இருக்கின்றார் என்றும் விராதன் துதித்தான் என்பது இப்பாட்டால் பெறப்பட்டது. மெய்யைத்தான் உய்யத்தான் - இவைகளிலுள்ள 'தான்' என்னும் அசைச்சொற்கள் சமயக்கோட்பாட்டினுட்கிடந்து 'இவன் பெரியன் அவன் பெரியன்' என ஐயுற்று ஒன்றிலும் துணிவுபெறாதுழலும் ஆன்மாக்களைப்பற்றி எழுந்த இரக்கத்தைவெளிப்படுத்திநின்றன. பிரமஹத்திதோஷத்தாற் பரமசிவன் பிசசைஎற்றுத திரிந்தபோது ஸ்ரீ மகாவிஷ்ணு

தமது கரத்தினூற் பிச்சையிட்டு அப்பிரமஹத்தியை நீக்கியருளினார் என்பது தோன்ற "மழுவாளிக்கன்றளித்த ஐயத்தால்"என்றுகூறினார் ஆசிரியர்.

33. (ப-ரை) ஏனமாய் மண் இடந்தாய் - வராகரூபமாய்ப் பூமியை எடுத்தருளியவனே, அன்னமாய் - நீ அன்னவடிவுகொண்டு, அருமறைகள் - அரிய பெரிய வேதங்களை, அறைந்தாய் - ஆதியில் (பிரமனுக்கு) உபதேசித்தாய், அவை - அவ்வேதங்களை, முன்னம் - அதற்குமுன்னர், உன்னை - உனக்கு, ஓதுவித்தார் - கற்பித்தவர், ஆர் - யாவர், எல்லோரும் முடிந்தாரோ - அவர்கள் அனைவரும் (இப்போழ்து) இறந்துபோயினரோ, பின்னமாய் ஒன்றுதல் - (ஜீவான்மாக்களுடன்) வேறாகியும் ஒன்றாகியும் இருக்குந் தன்மை, பிரிந்தேயோ பிரியாதோ - வேறுபட்டு நின்றோ (அல்லது) வேறுபடாமல் ஒன்றாயிருந்தோ, இவை - (இவ்வாறு வேறும் ஒன்றுமாயிருக்கிற) இந்நிலை, என்ன மாமாயம் - என்ன பெரியமாயமாயிருக்கிறது?

குறிப்பு:—மறை - இது ஆகுபெயராய் வேதத்திற்காயிற்று; மறைவான பொருளை உட்கொண்டிருத்தல் பற்றி என்ப. மறு - பகுதி, ஐ - செயப்படுபொருள் விகுதி. "முன்னமாரோதுவித்தார் எல்லாரும் முடிந்தாரோ" என்ற வினாவினால், உன்னையன்றி வேறு ஒருவருமில்லை' என்பது பெறப்பட்டது. இதிலுள்ள யார் என்பதின் விகாரமாகிய ஆர் என்பதும் ஈற்றிலுள்ள ஓகார வினாவும் இன்மைபற்றியும் எதிர்மறை பற்றியும் வந்தன. பின்னமாய் ஒன்றுதல் - பரமாத்துமாவும் சீவாத்துமாவும் வேறும் ஒன்றுமாயிருத்தல்; இதனை ஆன்றோர் விசிஷ்டாத்வைதம் என்பர். உன்னை - உனக்கு; இரண்டன் உருபு நான்கன் உருபுப் பொருள்தந்து நின்றது.

34. (ப-ரை) ஒப்பு - உவமை, இறையும் - சிறிதளவும், பெறல் அரிய - பெறுதற்கு அரிய, ஒருவா - (ஆதியான) ஒருவனே, முன் உவந்து உறையும் - முன்னர் திருவுளம் மகிழ்ந்து பள்ளிகொண்டிருந்த, அப்பு - திருப்பாற்கடலாகிய, உறையுள் துறந்து - இருப்பிடத்தைவிட்டு, அடியேன் அருந்தவத்தால் - அடியேனது பெருந்தவப்பயனால், அணுகுறலால் - இங்கு எழுந்தருளியதினால், இப் பிறவிக்கடல் கடந்தேன் - இந்தக் கடல் போன்ற பிறவியைத் தொலைத்து கரையேறினேன், இனிப் பிறவேன் - இனிப் பிறக்கமாட்டேன், இருவினையும் - பிறவிக்குக்காரணமாய (நல்வினை தீவினை என்ற) இரண்டு வினைகளையும், துப்பு உறழும் - பவள நிறம் நிகர்க்கும், நீர்த்த சுடர்த்திருவடியால் - பிரகாசமுற்ற அழகிய (நின்) பாதங்களினாலே, துடைத்தாய் நீ,- நீ துடைத்தருளினாய்.

குறிப்பு:—இறை - உயர்வெனப்பொருள்கொண்டு ஒப்பும் உயர்வும் இல்லாத எனினும் பொருந்தும். உறையுள் - இது வினைத்தொகை; தொழிலாகுபெயராய் இடத்தைக் குறித்ததெனினுமாம். பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் திருவடியைத்துப்புறழும் என்று புனைந்து கூறினார். துப்புறழும் என்பதற்குப் பரிசுத்தம் பொருந்தும் எனப் பொருள் கொள்வதும்

பொருந்தும். 'திருவடியால் துடைத்தாய் நீ' என்ற பெற்றி அத்திருவடியின் விசேஷத்தைச் சிறப்பித்து நின்றது.

35. (ப-ரை) ஊழியாய் - (சிருஷ்டியாதி முத் தொழிலுக்கும்) முதல்வனே, தெறுத்துவந்த - (உயிர்களை) அழித்துவந்த, தீது எலாம் - (என்னுடைய) பாவங்கள் முற்றும், அறுத்த உன்னை - போக்கியருளிய உன்னை, ஆதனேன் - அறிவற்றவனாகிய யான், ஒறுத்த தன்மை - வறுத்திய (அபசாரத்தை, பொறுத்தி என்று - பொறுத்தருள்வாயென்று, பிரார்த்தித்து - பிரார்த்தனை செய்து, போயினான் - தன் உலகம் சென்றான்.

குறிப்பு:—தீதெலாம் - இது ஒருமையிற் பன்மை: எல்லாம் என்பது எலாம் எனச செய்யுள் விகாரம்பற்றித் தொகககது.

36 (ப-ரை) இரவு - அன்றையிராத்திரி, உறும்பொழுது - வருங்காலத்து, குரவம் - குராவரும்பும், குவிகோங்கும் - குவிந்த கோங்கரும்பும், அலர் கொம்பினொடும் - (முடியிற் சூடி) மலர்கின்ற பூங்கொம்பு போன்ற பிராட்டியுடனும், (ஸ்ரீ ராமலக்குமணர்) அங்கண் - அவ்விடத்திலிருந்து, சரவங்கன் - சரவங்கரென்னும் மா முனிவர், இருந்து தவங்கருதும் - தங்கித் தவஞ்செய்துகொண்டு வருகிற, மரவம் - குங்கும மரங்களும், கிளர் கோங்கு - உயர்ந்து வளரப்பெற்ற கோங்கு மரங்களும், ஒளிர் - குவிந்து விளங்குகின்ற, வாசவனம் - மணம்பொருந்திய வனத்திலுள்ள (ஆச்சிரமத்திற்கு), ஏகினார் - சென்றார்கள்.

குறிப்பு:—குரவம் கோங்கு என்பன அம்மரத்தின்பெயர் அதன் மலர்களுக்காயதுபற்றி இவை பொருளாகுபெயரின் பாற்படும். தவம் - இது தபஸ் என்னும் வடமொழித்திரிபு. வாசவனம - வசிக்கத்தக்க வனம் எனவும் பொருந்தும். கொம்பு என்பது பூங்கொம்புபோன்ற சீதை என விரியுமாகவே இது உவமையாகுபெயா. ஒடும் - இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளது. குரவம் கோங்கு: மரவம் கோஙகு; இவைகளிலுளள எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன.

37. (ப-ரை) செவ்வேலவர் - கூர்மை தங்கிய வேலினை யுடைய (ஸ்ரீ ராமலக்குமணர்,) சென்றனர் - சென்று, சேரலுறும் - சேர்கின்ற, அவ்வேலையில் - அந்த நேரத்தில், தவ்வாது - குவியாது, இரவும் - இராப்போதிலும், பொலிதாமரையின் - மலர்ந்து விளங்குகின்ற செந்தாமரைப் பூக்களைப்போல், வெவ்வேறு - தனித்தனியே, அலர் - விரிந்த, ஆயிரமாம் - ஆயிரம் என்று சொல்லப்பட்ட, கண்ணினன் - கண்களையுடைய, விண்ணவர் கோன் - அமரர்களுக்கு அரசனாகிய (தேவேந்திரன,) எய்தினன் - (அங்கே சிறிது நேரத்திற்கு முன்) வந்தான்.

குறிப்பு:—செவ்வேல் - பகைவரது இரத்தந் தோய்ந்த வேல் எனவும் பொருந்தும். சென்றனர் - வினைமுற்று வினையெசசப் பொருள் தந்ததால் இது முற்றெச்சம். சேரலுறும் - இதிலுள்ள உறும் துணைவினை. தாமரை

யின் - இதிலுள்ள இன் உவமப்பொருள்தந்து நின்றது. இந்திரன் கண்கள் இமையாதனபற்றி அவற்றைக் குவியாத தாமரை என உவமிக்கப்பட்டது. ஸ்ரீ ராமலக்குமணர் சென்றகாலம் இரவானதுபற்றியும் இரவில் தாமரை மலராததுபற்றியும் இந்திரன் கண்கள் இமையாததுபற்றியும் இவ்வுவமை வழுவின்பாற் படாவண்ணம் 'இரவும் பொலி தாமரை' என்றார் ஆசிரியர். இது இல்பொருள் உவமையாயிற்று.

38. (ப-ரை) நின்றான் எதிர் - (சரபங்கர் ஆசிரமத்தில்வந்து) அவர் எதிரே நின்றான், நின்ற நெடுந்தவனும் - (அங்கு இருந்த) நிலைபெற்ற நெடிய தவத்துடன் கூடிய (அந்த முனிவரும்), எதிர்கொண்டு - (இந்திரனைப் பார்த்ததும்) எதிர்கொண்டு, சென்றான - அணுகினான், சிறப்பு அமையா - (இந்திரனுக்குச) சிறப்பான மரியாதைகளைச செய்து, இவண் - இவ்விடத்திற்கு, எய்திய ஆறு - வந்ததின் காரணம், என்என்றான் - என்ன வென்று கேட்டான், எனலும் - என்றுகேட்டலும், பொன்றாத - அழியாத, பொலங் கழலோன் - பொற்கழல் தரித்த இந்திரன், புகலும் - சொல்வானாயினான்.

குறிப்பு:—அமையா - அமைத்து; அமை - பகுதி; ஆ - வினையெச்ச விகுதி. சென்றான் - இதை முற்றெச்சமாகக் கொண்டு சென்று எனக் கொள்ளினும் அமையும். கழலோன் புகலும் - இது திணைவழு.

39. (ப-ரை) எந்தாய் - எம்பெருமானே, நந்தாத - கெடாத, பெருந்தவ - பெரிய தவத்தினையுடையவரே, உலகுயாவையும் - எல்லா உலகங்களையும், எ உயிரும் - எல்லா உயிர்களையும், தந்தான் - படைத்தவனாகிய, (பிரமன்) உறையும் - வசிக்கின்ற, நெறி - (தன்) உலகமாகிய பதவி, தந்தனன் - உமக்குக் கொடுத்தான், ஆல் - ஆகையால், நாடு அது - அந்த நாட்டுக்கு, நீ வந்தாய் எனின் - நீர் வந்தீராயின், நின்எதிரே - (உமமை எதிர் கொண்டழைத்தற்கு) உமக்குமுன்னர், வருவான் - (படைத்தற்கடவுளாகிய அந்தப்பிரமதேவன்) வருவான்.

குறிப்பு—எந்தாய்-இது சிறப்பினால் வந்த வழுவமைதி. வந்தாய்-இது இயல்பினால் வந்த வழுவமைதி. நாடது-இதிலுள்ள அது பகுதிப்பொருள் விகுதி; நான்காம்வேற்றுமைத்தொகை. பெருந்தவநாடு - பெரியதவத்தாலடையப்படுகின்ற நாடு எனக கூட்டிப் பொருள்கொள்ளினும் அமையும்.

40. (ப-ரை) நல்லாய் - (நல்ல) தவத்தையுடையவரே, எல்லா உலகிற்கும் - எல்லாப் பதவிகளுக்கும், உயர்ந்தமை - (அப்பிரமலோகம்) மேம்பட்டிருக்கின்ற தன்மையை, யான் சொல்லாவகை - நான் சொல்லாமலே, புணர் தன்மையை - நீர அறிந்திருக்கும் பழைமையுடையவராயிருக்கின்றீர், ஆல் - ஆதலால், நீ உடனே நட - நீர் உடனே வருவீராக, எனலும் - என்று இந்திரன் தெரிவித்த அளவில், வால் அறிவான் - சிறந்த ஞானியாகிய (அம்முனிவர்), அல்லேன் என - நான் அங்கு வரக்கூடியவன் அல்லன் என்று, அறைவான் - சொல்லுவாராயினர்.

குறிப்பு:—வால் - தூய்மை. 'வாலறிவான் அறைகுவான்' என்பதனைத் தூய அறிவினால் ஆராய்ந்து சொல்லுவார் என்றும் பொருள்கொள்ளலாம். 'உடனே நட'' என்றது "இப்பதவி கிடைத்தலரிது'' எனும்பொருள்தந்தது.

41. (ப-ரை) சொற் பொங்கு - (சொல்லச சொல்ல) அசசொல் மிகுதற்கு ஏற்றதான, பெரும் புகழோய் - பெரிய புகழோடு கூடியவனே, தொழில்மாய் - செயலற்ற, சிற்பங்களின் - சித்திரங்களைப்போன்று, வீவன - அழிந்துபோகும் தன்மையான, உலகங்களை - பதவிகளை, சேர்குவேனே - (யான்) அடைவேனே, அற்பம் கருதேன் - அற்பமான பதவிகளை நான் கருதுபவன் அல்லன், என் அருந்தவமோ - என்னுடைய அரிய தவமோ, கற்பம் பல சென்றது - பல கறபகாலஙகள் செலலப்பெற்றன, காணுதி - (நீ இதனை) அறிவாயாக.

குறிப்பு:—சொற்பொங்குபுகழ் - சொல்லுக்கடங்காத புகழெனவுமாம். கற்பம்பலசென்றது என்றமையான் நீ சொல்லும் பதவி கற்பங்கள்தோறும் அழிந்திருப்பதை யானறிவேன் என்பது பெறப்பட்டது. அற்பம் - இது ஆகுபெயராய்த் தாழ்ந்த பதவியைக் குறித்தது. ஓ - உயர்வு சிறப்புப் பொருளது. பொங்கு பெரும்புகழ்; மாய் சித்திரம் - தொகைநிலைத்தொடர்.

42. (ப-ரை) சூழ்கழலாய் - சூழந்திருக்கின்ற வீரக்கழல் அணிந்தவனே, இது - இந்த வார்த்தை, சொற்றும் தரம் அன்று - நீ சொலலததக்க வார்த்தையல்ல, பெறறும் பெறுகில்லது - அடைந்தாலும் அடையாத் தன்மையைப் போன்ற, ஓர் பெற்றியது - ஒரு தன்மையோடு கூடியது அது, (ஆதலான்) மற்றென்பல சொல் - வேறு பல வார்த்தைகளைச சொல்லிப் பயன் என்ன, இவண் வந்து - (யான்) இங்குவந்து, தவம்முறறும - செய்த தவம் முடியும், பகல் தானும - காலததையும, முடிததேன் - (தவம் நிறைவேறும்படி செய்து) முடித்தேன்.

குறிப்பு:—பெற்றியதே - இதிலுள்ள ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. தான் - அசை. உம்மை-உயர்வு சிறப்புப்பொருளது. ஆல் - ஈற்றசை. "இவண்வந்து உதவ எனப்பிரித்து'' ஸ்ரீ ராமபிரான் என்னைத் தேடிவந்து எனக்கு மோட்சமளிக்கும்படியான தவத்தைச செய்துமுடித்தேன் என்றும் பொருள் கொளளலாம். அங்கனமாயின் ஸ்ரீ ராமன் தோன்றாஎழுவாய்.

43. (ப-ரை) வானுடையாய் - தெய்வலோகத்தரசனாகிய இந்திரனே! சிறுகாலை இலா - அற்பமான காலவரை யில்லாமலும், நிலையோ திரியா - நிலைமை மாறாமலும், குறுகா - குறைவிலாமலும், நெடுகா - வளருந் தன்மை யில்லாமலும், குணம் வேறுபடா - குணம் வேறுபடாமலும், உறு கால் - உண்டாகின்ற ஊழிக்காற்றினாலே, கிளர்பூதம் - விளஙகுகின்ற பூதங்கள், எலாம் - அனைத்தும், உகினும் - அழிந்துபோனாலும், மறுகா நெறி - அழிதலில்லா இருக்கிற பதவியை எய்துவன், (நான்) அடைவேன்.

**குறிப்பு:**—காலவரையற்றது பரமபதம் ஆகவே சிறுகாலையில ரூர். 'சிறுகாலை உறுகால் - வினைத்தொகைத் தொடர்மொழிகள். கால் கிளர் பூதம் - உண்டாகின்ற காற்று முதலிய ஐம்பூதம் எனி அமையும், உகுதல் - தோன்றிய விடத்திலின்றொடுங்குதல், பூதங்களெல்லாம் ஒடுங்குகின்ற காலம் ஊழிக்காலமாகையாலும் அக்காலத்தினும் நித்தியமாயிருப்பது மோட்சமாகிய பரமபதமாகையாலும் பரமபதத்தை மறுகா நெறி என்றார். உகுதல் - உகு - பகுதி; தல் - தொழிற்பெயர் விகுதி.

44. (ப-ரை) என்று - என்பதாய், இன்ன விளம்பிடும் - இத்தகைய வார்த்தைகளை (முனிவர்) சொல்லுகின்ற, எல்லையின் வாய் - சொல்லின முடிவிலே, வன்திண் சிலைவீரரும் - வலிமை பெற்ற வில்லேந்திய (ஸ்ரீ ராம லக்குமணரும்,) வந்து அணுகா - அவ்வாசசிரமத்தில் வநது புகுந்து, ஒன்றும் - (அவவிடத்துப்) பொருந்தும், கிளர் ஓசையினால் - பெரிய பேசசரவத்தினால், உணர்வார் - அதன் (காரணத்தை) அறிபவர்களாய், நின்று - (அங்குச் சிறிது நேரம்) நின்று, இன்னது என்னை எனு - இந்தப் பேசசரவம் என்னவென்று, நினைவார் - ஆலோசித்தார்.

**குறிப்பு:**—வன்திண் - ஒருபொருட் பன்மொழி; இது வலிமையின் மிகுதியைக் காட்டி நின்றது. வாய் - இடப்பொருள்பற்றி வந்த ஏழனுருபு; இது பொழுதெனும் பொருள்தந்து நின்றது விளம்பிடுமெல்லை - வினைத் தொகைத் தொடர். அணுகா - அணுகு=பகுதி; ஆ - வினையெசச விகுதி.

45. (ப-ரை) ஒளிர் - பிரகாசிக்கின்ற, கோள் - வலிமையான, வயிரம் - வயிரப்பூண்களையுடைய, ஒத்தநால்கொம்பு - ஒரேவிமான நான்கு கொம்புகளை யுடைய, கம்பக்கரி - அசைந்தாடும் தன்மையுற்ற (ஐராவதம் என்னும) யானை, நின்றது - நிற்கின்றதை, கண்டனம் - பார்த்தோம், ஆல் - ஆதலால், உம்பர்க்கு அரசு - தேவர்களுக் கதிபதியான இந்திரன், இவன் - இவனாக (இருத்தல்வேண்டும), இம்பர்தலை - இவ்வுலகத்து, மாதவர்பால் - சரபங்க முனிவனிடதது, எய்தினன் ஆம் - வந்தான போலும், என்றுணரா - என்று அறிந்து.

**குறிப்பு.**—வயிரம் - இது யானையின் முடியுறுப்பாகிய ஆபரணம் என்று பொருள்தந்து நிற்பதால் அவ ஆபரணத்திற்கு ஆகுபெயராயிற்று. தலைமாதவர் எனக்கொண்டு முனிவர்களுக்கெல்லாம தலைவர் எனினும் பொருந்தும். மாதவர் என்பது சரபங்கரை மாத்திரங் குறித்தமையால் உயர்வு கருதி ஒருமையிற் பன்மைவந்தது. கம்பக்கரி - கண்டவர் பயந்து நடுங்கும்படி பெருதலுள்ள யானை எனப் பொருள்கொளினும இழுக்காது. ஒளிர்கொள் - வினைதொகை. உணரா - உணர்=பகுதி - ஆ=வினையெச்ச விகுதி. உணர்ந்து என்பது பொருள்.

46. (ப-ரை) மானே அனையாளோடு - மான்போன்ற பார்வையையுடைய பிராட்டியுடனே, மைந்தனையும் - இளைய பெருமாளையும், பூநேர் - பூக்

கள் செழிந்த, பொழிலின் புறமே-அசசோலைக்கு வெளியே, நிறுவா-நிறுத்திவிட்டு, ஆன்எறுஎன - இடபம் போலவும், ஆள்அரிஏறுஇதுஎன - விலங்குக்கரசாகிய ஆண்சிங்கம் போலவும், தானே - தான்மாத்திரம், அ அகன் பொழில் - அந்த விலாசமான சோலையை, சாருதலும் - கிட்டிய போழ்து.

குறிப்பு:—வானேறு, வாளரி எனக்கொண்டு சிறந்த இடபமும, அழகுள்ள சிங்கமும எனப் பொருள்கொள்ளினும் அமையும். சிஷ்டர்களைப் பரிபாலிக்கவும், துஷ்டர்களைச் சங்கரிக்கவும் கூடியவராதல்பற்றி ஸ்ரீ ராமபிரானை ஆனேறெனை ஆளரியேறெனை என்றார் ஆசிரியர். மான்; மைந்தன் - இவை அன்மொழித்தொகையாய்ப் பிராட்டியையும், இலக்குமணனையும் குறித்து நின்றன. தானே - ஸ்ரீ ராமபிரானே; இதிலுள்ள ஏகாரம் பிரிநிலை.

47. (ப-ரை) ஞாலினியின்கண் - இப்பூமியில், இமையோர் இறை - வானோர்க்கதிபதியாகிய (இந்திரன்) அருநான் மறையின் கனியை - தெரிதற்கரிய நான்கு வேதங்களின் பலமாயுள்ள (ஸ்ரீ ராமபிரானை), கருஞாயிறு என - கரிய நிறம்பெற்ற சூரியனைக் (கண்டாற்) போல, கண் அவை ஆயிரமும் - அவனது ஆயிரம கண்களும், கணதாமரை போல் - பெருமை பெற்ற தாமரை மலர்களைப்போல, கதுவ - மலர, கண்டான் - பார்த்தான்.

குறிப்பு:—இந்திரனது கண்களைத் தாமரை என்றாராகையால் ஸ்ரீ ராமபிரானை ஞாயிறு என்றார். கரு - அவரது திருமேனியின நிறத்தைக்குறித்தது கதுவ - கதுவு=பகுதி; அ=வினையெசசவிகுதி; கண்டாம், கண்டாமரை; கண் + தாம், கண் + தாமரை; ணகரத்தின் முன் தகரம் டகரமாய்த் திரிந்தது. தாம் தான - அசைகள்.

48. (ப-ரை) காணூ - (இந்திரன ஸ்ரீ ராமபிரானைத்) தரிசித்து, மனம் நொந்து - மனது வருந்தி, கவன்றனன - கவலை யடைந்தவனாய், ஆண்நாதனை - புருஷர்களில் உயர்ந்தவனும, அந்தணா நாயகனே - அந்தமாகிய மோட்சத்தை விரும்பும் பெரியோர்க்குத் தலைவனாகிய ஸ்ரீ ராமபிரானை, நாள நாளும் - அனுதினமும், வணஙகிய நல்முடியால் — வணங்கி வருகிற உயர்ந்த முடியினாலும், தூண் ஆகியதோள்கொடு - தூண்களுக்கொப்பாகிய (தனது) தோள்களினாலும், அவன் - அந்த (நாராயணனது திருவவதாரமாகிய) ஸ்ரீ ராமபிரானை, தொழுவான் - வணங்கினான்.

குறிப்பு:—"தேவராதிய சிஷ்டர்களை ரட்சிக்கும்பொருட்டுப் பகவான் அரவணை துறந்து காய்கனியுண்டு கல்லணை துயின்று பங்கயச சீரடி பார் மிசைநடந்துநோவ இங்ஙனம்வந்தானே" என்று இந்திரன்வருந்தினனாகவே "காணூ மனநொந்து கவன்றனன்" என்றார். இந்திரன் முதலிய அனைவர்களும் அனுதினமும் பரம பதத்தில் பகவானைக்கண்டு தரிசிக்கிற வழமை பற்றியும் அவனே ஸ்ரீராமனாக அவதரித்திருப்பதுபற்றியும் அங்ஙனம் அவதரித்த அவன் அங்குமிருக்க இங்குமிருக்கிற தன்மைபற்றியும் அப்பெற்றி

தோன்றனாளும் வணங்கியனான்முடியால் என்றார்ஆசிரியர். காணூ - காண் பகுதி; ஊ - வினையெச்ச விகுதி. 'முடியால், தோள் கொடு' என்பனு எண்ணும்மைகள் தொக்க 'ஆல் கொடு'என்னும் வேற்றுமை யுருபுகளையேற்றன. முடியாலும் தோளாலும் வணங்கினான் என்பது பொருள். அவற்றொழு தான் - அவனைத் தொழுதான்; இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத் தொடர். உயர்திணையிடத்து ஐ உருபு தொக்கது. ஆல் - அசை.

49. (ப-ரை) துவசம் ஆர் - வெற்றிக்கொடிகள் சூழ்ந்த, தொல் அமருள் — பழமையான யுத்தங்களில், துன்னாரை - பகைவரை, செற்றும் — தொலைத்தும், சுருதிப் பெருங்கடலின் - வேதங்களாகிய பெரிய கடலினிடத்து, சொல்பொருள் - சொற்களையும் அவைகளின் அர்த்தங்களையும், கற்பித்தும் - உபதேசித்தும், திவசம் - நாள்தோறும, மா நல் அறத்தின் - சிறந்த தருமத்தின், செந்நெறியில் - நல்வழியில், உய்த்தும - செலுத்தியும், திரு அளித்தும் - செல்வத்தைக் கொடுத்தும், வீடு அளித்தும் - மோட்சத்தைக்கொடுத்தும, சிங்காமை - அழிதலில்லாமல், தங்கள் - தங்களுக்கு, கவசமாய் - மெய்க்காவற்போர்வையாயும், ஆர் உயிராய் - நிறைந்தஉயிராயும், தவமாய் - தவமாகியும், கண்ணாய் - கண்ணாகியும், கடையிலா ஞானமாய் - முடிவிலாத ஞானமாகியும், காப்பானை - காத்துவருகின்ற ஸ்ரீ ராமபிரானை, காணூ - கண்டு, அவசமாய் - (தன்னை) மறந்தவனாய், சிந்தை அழிந்து - மனது உருகி, அயலே நின்றான் - பக்கத்தில் நின்று, அறியாதான் போல - (ஸ்ரீராமபிரானது) மேன்மைகளைத்தெரியாதவன் போல, அறிந்த எலாம் - (தான்) அறிந்த (பகவானது) திருக்கல்யாண குணங்களை எல்லாம், சொல்வான் - சொல்லிக்கொண்டு (துதிசெய்வானாயினான்).

குறிப்பு:—வீடு - விடு: இது முதனிலை திரிந்த தொழிற்பெயர்; பந்தங்களினின்று விடுபடுவது என்பது இதன் பொருள். சிங்காமை - இது சிங்காமல் என்னும் பொருள்தந்து நிற்பதால் வினையெஞ்சு கிளவி என்பர். ஆர் என்பதனை அருமையெனக்கொண்டு, அருமை என்னும் பண்பு ஆர் எனத் திரிந்தது எனினுமொக்கும். சிருஷ்டி திதி சங்கார முதலிய எத்தொழிலினும் தானே ஒரு மூலமாய் நிற்பினும் காத்தற் கடவுள் ஸ்ரீமந் நாராயணனென்பதுபற்றியும் காத்தற் பொருட்டே அவதரித்திருப்பதுபற்றியும் 'காப்பானை' என்றார். அவசம் - சுவாதீனமின்மை; அவசமும் சிந்தையழிதலும் பக்தியாலுண்டாகும் ஓர்வித மெய்ப்பாடுகள்.

50. (ப-ரை) பொருள் அனைத்தும் - எல்லாப் பொருள்களிலும், தோய்ந்தும் - (உட்புறம் வெளிப்புறம்) கலந்திருந்தும், தோயாது நின்ற - (அவற்றின் குணதோஷங்களில்) சம்பந்தப்படாமலே நின்ற, சுடரே - சோதிவடிவமே!, தொடக்கு அறுத்தோர் - பற்றுக்களை முற்றுந் துறந்த மேலோர், சுற்றமே - உறவானவனே!, பற்றி நீந்த - (ஒன்றை ஆதாரமாகப் பிடித்துக்கொண்டு கடப்பதற்கு, அரிய - அருமையாகிய, நெடுங்கருணைக்கெல்லாம் - நிறைந்தஅருளுக்கெல்லாம், நிலயமே - இருப்பிடமானவனே,!

வேதநெறிமுறையின் - வேதங்களிற் கூறிய நீதிவழிகளின், தேடி ஆய்ந்த - தேடி ஆராய்ந்தறிந்த, உணர்வின் - விசேட ஞானத்தின், உணர்வே - உணரப்படும்பொருளே!, எந்தாய் - எனக்குத் தாயுந்தந்தையும்ஆய் (நின்றவனே,) அடியேம் - அடியவாகளாகிய (யாங்கள்), பகையால் - (அரக்கர் முதலிய) பகைவர்களினால், அலைப்புண்டு - துன்பத்தில் உழன்று, அடி போற்ற - (உனது) மலர்ப்பாதங்களைத் துதிக்க, அந்நாள் - அந்தக்காலத்தில், ஈந்த - கொடுத்தருளிய, வரம் - வரத்தின்படி, உதவ - (எமக்கு) உதவிபுரிவதற்கு, எய்தினையே - (இங்கு) திருவவதாரஞ் செய்தருளினையே, நின் இணையடித் தாமரை - உன்னுடைய இரண்டு திருவடித்தாமரைகள், இருநிலத்தவோ - இப்பரவிய பூமியிற் பொருந்தத்தகையனவோ? (இல்லை என்றபடி)

குறிப்பு:—நீந்தவரிய நெடுங்கருணை என்றபடியால் கருணையை ஒரு கடல் என உவமானிக்கப்பட்டது. நீந்த அரிய பிறவிக்கடல் என்றவிடத்து அதன் துன்பத்தை விசேடிக்கவந்த நீந்த என்ற சொல்லே ஈண்டு பகவானது கருணைக்கடலின் இன்பத்தை விசேடித்தல்பொருட்டு வந்து நின்றது; எவ்வாற்றானும் பகவானது திருக்கருணையை அளவிடமுடியாதென்றபடி. பகை - பண்பாகுபெயர். பிரமன் முதலிய தேவர்களையும் உளப்படுத்தி அடியேம் என்றார். அந்நாள் என்றது தேவர்கள் அசுரர்களின் கொடுமைக் காற்றாது சீராப்தியிற் சென்று அரிபரந்தாமனைப் பிரார்த்தித்த தினத்தை. அதுதருணம் பகவான் துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனத்தின்பொருட்டு 'யாம் திருவவதாரஞ் செய்கின்றோம்'என்று வாக்குக்கொடுத்துள்ளபடியால் ஈந்தவரம் என்றார். தோயாது என்பதினீற்றில் தேற்ற ஏகாரம் செவிக்கினிய ஓசையளவுபற்றித் தொகுத்துள்ளதாகக்கொண்டு தோயாதே எனப் பொருள்கொள்ளவேண்டும். எந்தாய் - இது தாய்க்கும் தந்தைக்கும் பொருள்தருமாகவே இரட்டுற மொழிதல். நிலத்த - நிலம்=பகுதி; அத்து= சாரியை; அ=பலவின்பாற் படர்க்கை விகுதி. தம் - சாரியை.

51. (ப-ரை) நளினத்து - (உன்னுடைய) நாபிக்கமலத்து, நீதந்த - நீ உண்டாக்கிய, நான்முகனார் தாமே - நான்கு முகங்களோடுகூடிய பிரமதேவர் தாமே, கவைதீர் - குற்றமற்ற, உலகுஎல்லாம் - உலகங்கள் எல்லாவற்றையும், நாளியாக - நாளியென்ற அளவுகருவியாக வைத்து, ஊழிபலபலவும் - அநேக கற்பகாலமாகவும், நின்று - (ஓயாது) நிலைத்து, அளந்தால் - (உனது அனந்த கல்யாண குணங்களைத் தானியமாகக்கொண்டு) அளந்தாலும், ஒன்றும் உலவா - (அவற்றுள்) சிறிதளவேனும் முடியாத, பெருங்குணத்த உத்தமனே - மிக்க குணங்களோடு கூடிய உத்தமனே!, மேல்நாள் - முற்காலத்தில், தரை தாழியாக - பூமி (தயிர்ப்) பானையாகவும், நீர் தண்தயிராக - பாற்கடல் நீரே குளிர்ந்த தயிராகவும், தடவரையே - பெரிய மந்திரமலையே, மத்துஆக - தயிர்கடையும மத்தாகவும் (கொண்டு), தாமரைக்கைநோவ - (உனது) தாமரை மலருக்கொப்பான திருக்கரங்கள் நோகும்படி, ஆழி - திருப்பாற்கடலை, கடைந்து - (வற்றும்படி) கடைந்து,

அமுதம் - (அதினின்று உண்டாய) அமிர்தத்தை, எங்களுக்கே - தேவர்களாகியஎங்களுக்குமட்டிலுமே, ஈந்தாய் - கொடுத்தருளினாய், அவுணர்கள் - (கடலைக் கடைதற்கு எங்களோடு கஷ்டப்பட்ட) அசுரர்கள், நின் அடிமையல்லாமை - நினக்கடிமையாளராகாமை, உண்டோ - உளதோ?, (இல்லை என்றபடி) அசுரர்கள் அமிர்தம் பெறாமைக்குக் காரணம் அவரது குற்றமே என்பது குறிப்பாற பெறப்பட்டது.

குறிப்பு:—உலகை நாழி என்று உருவகப் படுத்தியபடியால் அதில் அளக்கின்ற தானியம் ஸ்ரீ ராமபிரான் திருக்கல்யாண திவ்ய மங்களங்களென 'ஒன்றுமுலவாப் பெருங்குணத்த உத்தமனே' என்ற சொல்லாற்றலில் பெறப்பட்டது. இது ஏகதேச உருவக அணி. நாழி முகத்தலளவை ஆகுபெயர். அளந்தால் ஒன்று - அளந்தாலும் ஒன்று; இதிலுள்ள உயர்வுச சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஆழி - ஆழ்ந்திருப்பது; ஆழ் - பகுதி; இ - வினைமுதற்பொருள் விகுதி. எங்களுக்கே இதிலுள்ள - ஏகாரம் பிரிநிலை. அடிமை - இது பண்பாகுபெயராய அசுரர்களைக் குறித்தது. உண்டோ - இதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப்பொருளது. மகா பிரளயந்தோறும் இறந்து பிறக்கின்ற பிரமதேவன் அவவாறு இறவாது நின்று அளந்தாலும் அளக்கமுடியாத திவ்ய திருக்கல்யாண மங்களகுணங்களோடு கூடிய நின்னை எம்மனோரால் அளக்கமுடியாது என்பது பொருள்.

52. (ப-ரை) எந்தாய் - எமது பிதாவே!, மேல்நாள் - பண்டைக்காலத்தில், வரம்புஇல்லாத - முடிவு இல்லாத, மாயவினை தன்னால் - மாயையினுடைய சூழ்ச்சியின் வினையினால், (நீ) இறைவன் அல்லை - நீ பரதத்துவமாகாய், நீ ஆதி - (நீ இறைவனாகிய) பரத்துவமாவாய், என - என்று, பேதுற்று - மனம தடுமாறப்பெற்று, மயங்கினரோடு - மதிமயங்கித் திரிந்த தேவர்களோடு, எய்தி - சேர்ந்து, மதிமயங்கி - அறிவுதடுமாறி, அலமருவேம் முன்னை - நிலைகலங்கிநின்ற எங்கட்கெதிரில், அந்நாள் - அதுசமயம், அறப்பயன் உண்டாக - (பூர்வகாலததிற் செய்த, புண்ணியப் பேறீட்டின் பலன் கைகூட, வல்லை - விரைவாக, எழுவா என நின்ற - எழுபேர் என்று சொல்லும்படிநின்ற, தொல்லை முனிவர் - பழைமையான தவமுனிவர்கள், எரியோனை - அக்கினிக்கண்ணோடுகூடிய சிவபிரானை, தீண்டி - அணுகி. வலயங்கள் எல்லை - உலகங்களினெல்லைகள், நின்னுழை - உன்னிடத்திலிருந்து உற்பவித்து வளர்ந்து வருபவை அதாவது (நீயே பரத்துவம), என்று - என்பதாக, சூளுற்றபோதே - தீர்மானஞ் செய்த காலத்தே, தொகைநின்ற ஐயம் - மேலும் மேலும வளருகின்ற சந்தேகத்தை, துடைத்திலையோ - (நீ அக்காலத்தில்) நீககிவைத்தவன் அல்லையோ?

குறிப்பு:—பேது - பேதமென்பதின் விகாரம. ஆக - செயவெனெச்சம் காரணப்பொருட்டாய் இறந்தகாலத்தைக் காட்டிநின்றது. வலயம் வட்டம்; இது உலகத்திற்கு ஆகுபெயர். எரியோன் 'தழனிற' வண்ணன் என்ற பெரியார் வாக்குப்படி அக்கினி நிறத்தானாகிய சிவபிரான் என்

றும், அக்கினிக்கண்ணையுடைய சிவபிரான் என்றும் பொருள் கொள்ள லாம். வல்லே - காலவிரைவை யுணர்த்துமோர் இடைச்சொல். அலமரு வேம் - அலமரு பகுதி. எழுவர்முனிவர் - அத்திரி, பிருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காசிபர், ஆங்கீரஸர். போது - பொழுது என்பதின் மரூஉ. மேனாள் என்பது முற்காலத்தையும் அந்நாள் என்பது அதுசமயத் தையும் குறித்து நின்றது. அல்லே - அல்; பகுதி; ஐ - முன்னிலை யொரு மை வினை முற்றுவிகுதி. ஆதி - ஆ=பகுதி, த்=எழுத்துப் பேறு: இ= முன்னிலையொருமை வினைமுற்றுவிகுதி; ஆ - ஆதலைச்செய்யெனமுன்னிலை யேவல்வினை. பகாப்பதமெனக்கொண்டு ஆகியாயிருப்பவனெனினுமாம்.

53. (ப-ரை) பொன்ஞெளிர் - பொன்மயமாய்ப் பிரகாசிக்கிற, நெடு முடி - நீண்ட கிரீடந்தரித்த, புரந்தரன் - இந்திரன், இன்னன - இத்தன் மையனவாகிய, பலநினைந்து - பல விஷயங்களை மனதில் தியானித்து, இயம்பா - (அவற்றை) நாவினால் சொல்லி, எத்தினன் - துதிசெய்பவனாய், இடைதுன்னுதல் - இடையிற் பொருந்தியிருக்கிற விசேடம், உளதுஎன - (ஒன்று) இருக்கின்றதென்று, நனி - நன்றாய், துணிவான் - நிச்சயித்துக் கொண்டவனாய், தன்னிகர் முனிவனை - தன்னையன்றி வேறு ஒப்பற்ற அந்தச (சரபங்க) முனிவனை, தரவிடை எனா - (நான் போவதற்கு) விடைதரவேண்டும் என்று (கேட்டு), போனான் - (அம்முனிவரிடத்தில் விடைபெற்றுச) சென்றான்.

குறிப்பு:—துன்னுதல் - இது தொழிலாகுபெயராய் இனி நடக்கப் போகின்ற நிகழ்ச்சியைக்குறித்து நின்றது. தர - தா=பகுதி, முதல்குறி கியது. அ=வியங்கோள் வினைமுற்று விகுதி, நனி - இது நன்றாய் என் னும் பொருள்தரவந்த உரிச்சொற் பகாப்பதம். இயம்பா, எனா என்ற எச்சங்கள் போனான் என்ற முற்றைத் தழுவி முடிந்தன.

54. (ப-ரை) உரவோய் - பராக்கிரமமுடையவனே, இறுதி செய் பகலா - நேற்று மாலை, மலர் அயன் - மலரிலே தோன்றிய பிரமன், அருளி னன் - அருள்புரிபவனாகி, உலகம் தந்தனன் (தனது) பதவியை உனக் குக் கொடுத்தான், மருவுதி - வந்தருள்வாய், என - என்றுசொல்லி, இந்தி ரன் வந்தனன் - தெய்வேந்திரன் வந்தான், அந்தம் இல் - முடிவு இல்லாத, உயர்பதம் - பரமபதத்தை, அடைதலே - அடைவதற்கு, முயல்வேன் - முயற்சி செய்துகொண் டிருப்பவனாகிய நான், அது சாரலென் - அப்பத வியையடையவில்லை. (அடைய விரும்பேன் என்றபடி)

குறிப்பு:—இறுதி செய்பகல் - பகல்போய் இரவு வருந்தருணம்; மா லைப்பொழுது. பகலா - இதிலுள்ள ஆ வியப்புப்பொருளாற வந்தது. அரு ளினன் முற்றெச்சம். மருவுதி - மருவு=பகுதி; த=எழுத்துப்பேறு, இ= முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி. தந்தனன் - தா என்னும பகுதியடி யாய்ப் பிறந்த தெரிநிலை வினைமுற்று.

55. (ப-ரை) புகலா - சொல்லப்படாத, வேதமும் அறிவு அரு - வேதங்களாலு மறியமுடியாத, மிகுபொருள் - மிகுந்த பெருமையான பரம பதத்தை, உணர்வோன் - அறிபவனுகிய முனிவர், ஆதலின் - ஆகையினு லே, இதுபெற - இந்த மோட்சசாதனத்தை அடைய, அருள்என - அருள் செய்வாயென்று, உரையா - சொல்லி, காதலியவளோடு - (தமது) மனைவி யுடனே, கதழ்எரி - உக்கிரமாக எரிகின்ற வேள்வித்தீயில், மூழ்கி - பிர வேசித்து, ஒரு நெறி - ஒப்பற்று விளங்குகின்ற பரமபதத்தை, போதலை மருவினன் - போய்சசேர்ந்தார்.

குறிப்பு:—இதுஎனசசுட்டியது தாங்கருதித் தவம்புரிந்த பரமபதம் என்ற மோட்சசாம்ராசசியததை. உரையா - உரைத்து; வினை எச்சம். போதலை இதிலுள்ள ஐ சாரியை. மருவினன் என்ற இறந்தகாலம்பற்றிப் போதல் என்பது போய் என்னும் பொருள்தந்துநின்றது. ஒரு நெறி - இது இரண்டாம்வேற்றுமைத தொகைநிலைத்தொடர்; ஒருநெறியை மருவி னன் என்று விரியும்.

56. (ப-ரை) அனையவன் - அந்தச் சரபங்க முனிவருடைய, இறுதி யின் அமைவு - முடிவுகாலத் தன்மையை, நோக்கலின் - பார்த்ததினுல், இனியவர் - (அனைவருக்கும்) இன்பத்தை அளிக்கின்றவர்களும, இன்ன லின் - (முனிவர் அக்கினியிற் பிரவேசித்ததைப் பாாத்துக்கொண்டிருந்த தினுல் உணடாகிய) வருத்தத்தினுல், இரஙகும் நெஞ்சினர் - உருகுகின்ற மனமுடையவர்களுமாகிய, குனிவரு திண்சிலைக் குமரர் — வளைந்த வில்லினை யுடைய ஸ்ரீ ராமலக்குமணர்கள், கொம்பொடும் — சீதாபிராட்டியோடும், புனிதனது உறையில் நின்று - புனிதராகிய சரபங்கரது ஆச்சிரமத்திலி ருந்து, அரிதில் போயினுர் - அரியதன்மையிற் சென்றுர்கள்.

குறிப்பு:—அனையவன் - சுட்டிடைச சொல்லடியாகப் பிறந்த பெயர்; முனிவரைக்குறித்தது. நோக்கலின் - இதிலுள்ள இன் உருபு ஏதுப்பொ ருளில் வந்தது. குனி - முதனிலைத் தொழிற்பெயர். கொம்பு உவமை யாகுபெயராய்ப் பிராட்டியைக்குறித்தது. சாட்சாத ஸ்ரீ ராம பிரானைத் தரிசித்து வீடடைந்தபடியால் முனிவரைப் புனிதன் என்றுர். உறையுள் உறை=பகுதி; உள்=தொழிற்பெயர் விகுதி. முனிவர் பிரிவாற்ருது ஸ்ரீ ராமலக்குமணர்கள் சென்றுராகவே அரிதிற் போயினுர் என்றுர்.

57. (ப-ரை) மலைகளும் - மலைகளையும், மரங்களும் - விருக்ஷஜாதி களையும், மணிக்கற்பாறையும் - அழகான கற்பாறைகளையும், அலைபுனல் அலைகின்ற தண்ணீரையுடைய, நதிகளும் - ஆறுகளையும, அருவிசாரலும் நீர் அருவிகள் பாய்ந்தோடுகின்ற மலைப்பக்களையும், இனிய [illegible]ஙும் (பார்ப்பதற்கு இன்பந்தரத்தக்க மற்றைச) சுற்றுப்புறங்களையும், [illegible] தடங்களும் - நிலைத்திருக்கின்ற (நீர்த்) தடாகங்களையும், இனிது - இன் யாக, நீங்கினுர் - கடந்து சென்றுர்கள்.

**குறிப்பு:**—அருவி - மலையிலிருந்து கீழ் விழுந்தோடுகின்ற ஆறு. சாரல் - இது மலையினருகு சூழ்ந்துள்ள இடத்திற்குத் தொழிலாகுபெயர். மலைகளும் - இதுமுதல் தடங்களும் என்பதினீற்றுவரையுள்ள உம்மைகள் எண்ணுப்பொருளன. அவை அனைத்தும் இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். நிலை - பரப்பு; ஆழம் எனினும் பொருந்தும்.

58. (ப-ரை) பண்டையவயன - முன்காலத்துள்ள பிரமதேவன், தரு - படைத்தருளிய, பாலகில்லரும் - வாலகில்யர் என்ற மகரிஷிகளும், முண்டரும் - சன்னியாசிகளும், மோனரும் - மௌனநிலையிலிருப்பவரும், முதலினோர்கள் - முதலானவர்களாகிய, அத்தண்டகவனத்து - அந்தத் தண்டகாரண்யத்து, உறை - தங்கியிருக்கின்ற, தவத்துளோர்கள் - தவம் புரிந்துகொண்டிருப்பவர்கள், களிக்கும் சிந்தையார் - சந்தோஷமனமுடையவராய், இராமனை - ஸ்ரீ ராமபிரானை, கண்டனர் - பார்த்தார்கள்.

**குறிப்பு:**—வாலகில்யர் - இது மோனைபற்றிப் பாலகில்லர் என்றாயிற்று; இவர்கள் அங்குஷ்டப் பிரமாணமுடையவர்களாய்த் தோன்றிய அறுபதினாயிரம் ரிஷிமார்கள். முண்டர் - மொண்டவர்; இச்சொல் ஒரு கூட்டமாகிய சன்னியாசிகளைக் குறித்தது. தமக்கு விரோதிகளாயிருந்து வருகிற அசுரர்கள் ஸ்ரீராமபிரானாற் கொல்லப்படுவார்கள் என்ற நம்பிக்கை பற்றி முனிவர்கள் மனங்களித்தவராகவே 'களிக்குஞ்சிந்தையார்' என்றார். ஸ்ரீராமபிரானைக் கண்டபின்னரே முனிவர்கள் களிப்புற்றனர் ஆகவே 'களிக்குஞ்சிந்தையார் (ஆய்க்) கண்டனரிராமனை' எனத் திரித்துப்பொருள் கொள்க ஆய் சொல்லெச்சம்.

59. (ப-ரை) கரக்கரும் - ஒளிப்பதற்கு அரிய (வெளிப்படையான), கடும்தொழில் - கொடிய செய்கைகளையுடைய, அரக்கர் - இராட்சதர், காய்தலின் - துன்புறுத்துவதினால், பொரற்கு - (அவர்களோடு) போர் புரிகிறதற்கு, இடம் இன்மையின் - வகையில்லாதவராய், புழுங்கிசோருநர் - மனதுநொந்து வருந்துகின்ற அம்முனிவர்கள், அரக்கர் என்கடல் இடை - இராட்சதர்கள் என்று சொல்லப்படுகிற (பெரிய) சமுத்திரத்தினிடத்திலே, மூழ்கின்றார் - மூழ்கித்தவிக்கின்றவர்கள், ஒரு மரக்கலம் பெற்றன - (கடந்து கரையேறுதற்கு) ஒரு கப்பலைப் பெற்றவர் போல, மறுக்கம் நீங்கினார் - மனக்கலக்கம் நீங்கப் பெற்றார்கள்.

**குறிப்பு:**—கரக்கரும் - கரக்க=அரும்; அகரம் தொகுத்தல். கரக்கரும் - எவரும் எதிர்த்து மறுக்கமுடியாத எனவும் பொருள் தரும். சோருநர் நகரம் பெயரிடைநிலை இராட்சதர்கூட்டம் அதிகமென்பது தோன்ற அவரைக்கடலாகவும் அவர்பால் சிக்கி மீளவகையற்றுத் துன்பத்தில் மூழ்கின்றாரென்பது தோன்ற முனிவர்களை யக்கடலிலாழ்பவரென்றும் அவ்வரக்கரைக் கொன்று முனிவர்களைக் காப்பாற்ற வந்தானென்பது தோன்ற ஸ்ரீராமபிரானை யக்கடலினின்று கரை சேர்க்கின்ற மரக்கலமென்றும்

உவமை கூறினர் ஆசிரியர். பெற்றென - பெற்றார்கள் என-இது செய்யுள் விகாரம் பற்றித் தொக்கது. காய்தலின் - காய்தனினல்; உருபு மயக்கம்.

60. (ப-ரை) இரக்கம் என்ற - இரங்குதல் என்று சொல்லப்படுகிற, ஒரு பொருள் - ஒப்பற்ற காருண்யம், இலாத நெஞ்சினர் - இல்லாத மன முடையவராகிய, அரக்கரென்று - இராட்சதர்கள் என்று சொல்லப்பெற்று, உளர்சிலர் - சிலரிருக்கின்றார்கள், அறத்தின் நீங்கினர் - தரும மார்க்கத்தி லிருந்து விலகின அவ்வரக்கர்கள், நெருக்கவும் - (எங்களைத்) துன்பப்படுத் துவதினாலும், யாம் - நாங்கள், படாநெறியலா - நடப்பதற்கேற்ற நல்லொ ழுக்கமில்லாத, நெறி - தீயொழுக்கத்தில், துரக்கவும் - (அவ்வரக்கர்கள் எங் களைச்) செலுத்துவதினாலும், அருந்தவத்துறையுள் - அரிய தவமார்க்கத்தி னின்றும், நீங்கினேம் - (நாங்கள்) விலகினோம்.

**குறிப்பு:**—என்றொரு - என்ற ஒரு; அகரம் தொகுத்தல். இரக்கத்தின் உயர்வு கருதி அதைப் பொருளென்னப்பட்டது. வினைதைப் பொரு ளென்று கொண்டவன் என்றார் நாயனார். துறையுள் - உள்; இடப்பொ ருள் பற்றிவரும் ஏழனுருபு நீக்கப் பொருள்பற்றி வரும் ஐந்தனுருபில் மயங்கியது உருபுமயக்கம்.

61. (ப-ரை) வில்லியல் - கோதண்டம் பொருந்திய, மொய்ம்பினுய்- புயத்தோடு கூடியவனே, வல்லியம்பல - அனேகம் புலிகள், திரிவனத்து- சஞ்சரிக்கின்ற காட்டினிடத்து, மான்என - மான்கூட்டங்களைப் போல, எல்லியும் பகலும் - இரவும் பகலும், நொந்திரங்கி - மனது நொந்துவருந்தி, ஆற்றலேம் - (அரக்கர்கள் செய்யும் கொடுமைகளுக்கு) ஆற்றாதவர்களாய், சொல்லிய - (வேதங்களிற) சொல்லப்பட்ட, அறநெறித்துறையும் - தர்ம மார்க்கத்தின் வகைகளிலிருந்தும், நீங்கினேம் - வழுவினோம் (ஆதலின்) வீடு காண்குமோ - இத்துன்பததினின்று விடுதலை பெறுவேமோ.

**குறிப்பு:**—அரககரைப் புலியொடும் முனிவரை மானொடும் ஒப்பிட்ட உவம அடைசசொல் அவரவா செய்கை காட்டி நிற்றது. ஆற்றலேம - இதி லுள்ள எம் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று விகுதி. காண் தும்-கும்- எதிர்காலம் பற்றிவந்த பன்மைத் தன்மை விகுதி.

62. (ப-ரை) மாதவத்து - மகிமை பொருந்திய தவநெறியில், ஒழுக லேம் - நடக்கின்றோமில்லை, மறைகள் யாவையும் - வேதங்கள் அனைத்தை யும், ஓதலம் - ஓதுகின்றோமில்லை, ஓதுவார்க்கு - ஓதுகின்றவர்களுக்கு, உதவலாற்றலம் - உதவிசெய்கின்றோமில்லை, மூதெரி வளர்க்கிலம் - பழ மைபற்றிய யாகாக்கினியை வளர்க்கின்றோமில்லை, நெறியின் நீங்கினேம்- ஒழுக்கத்திலிருந்து தவறினோம், ஆதலின் - ஆசையினுல் [illegible] அந்தணரேயும் ஆகிலம் - அந்தத்தை விரும்புகின்றவராய் மாகின்றோமில்லை.

**குறிப்பு:**—இராட்சதர்களால் நேர்ந்த இடையூறுகளை முன்னை ஓதல் ஓதுவித்தல் முதலிய ஒழுக்கங்கள் கெட்டமையான் "ஓதலம் ஓது

வார்க்குதவலாற்றலம்" என்றார். மறைகள் யாவையும் என்றது வேதங்களையும் அவற்றின் அங்கங்களையுமாம். முறை - ஒழுக்கம், "ஓதலெம், ஒழுகலெம், ஆற்றலெம்," இவைகளினீற்றிலுள்ள 'எம்' விகுதிகள் எதிர்மறைத் தன்மைப்பன்மையைக் காட்டிநின்றன. ஏம் விகுதி கூட்டி "ஒழுகலேம் ஓதலேம் ஆற்றலேம்" என்பதும் ஒரு பாடபேதம்.

63. (ப-ரை) இந்திரன் எனின் - இந்திரனேயென்றால், அவன் - அன்னவன், அரக்கர் ஏயின - இராட்சதர்கள் ஏவியபடி, சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையான் - மனத்திலும் சிரத்திலும் தாங்கிச் செய்கையை யுடையவனா யிருக்கின்றான், (ஆகையால்) எந்தை - எங்கட்கிறைவனே, இடுக்கண் நீக்குவார் - (எங்கள்) கஷ்டங்களை நீக்குகின்றவர்கள், மற்றியார் உளர் - வேறு எவர் இருக்கின்றார்கள், (உன்னைத்தவிர ஒருவருமில்லை என்றபடி) யாம் செய்தவத்தின் - நாங்கள் செய்துள்ள தவத்தின், மாட்சியான் - மகிமையினால், வந்தவன் - (நீ எங்களைக் காத்து இரட்சிப்பதற்கு) வந்தருளியிருக்கின்றாய்.

**குறிப்பு:**—இந்திரன் அரக்கர்களுக்கு அஞ்சுகின்றான் என்பது பற்றியும் அரக்கரை யடக்கி ஆளுங்கடமை அவனைச் சார்ந்தது என்பது பற்றியும் ஈங்கு அவனை எடுத்துக் கூறினர். அரக்கர் ஏவுவது அக்கிரமச் செய்கையாயிருந்தும் அதனைச் செய்யப் பயத்தினால் உடன்படுகிறானென்பது தோன்றச் சென்னியில என்றார், செய்து முடித்து அதனை மீண்டும் அவ்வரக்கர்பால் தெரிவிப்பதற்குச் சந்தர்ப்பம் நேருகிறவரை அவன் அதை மனதில் மறவாமல் வைத்திருக்கிறானென்பது தோன்றச் சிந்தையில் என்றும் கூறினார். வந்தனை என்ற சொல்லாற்றலினால் மற்றியாருளர் என்பது "நின்னையன்றி" என்ற பொருள் பற்றி நின்றது. ஏயின என்பது ஏவின என்பதின் திரிபு; இது செவிக்கினிமை பற்றித் திரியநேர்ந்தது. எந்தை - அண்மைவிளி.

64. (ப-ரை) உருள் உடை நேமியால் - உருண்டு செல்லுதலையுடைய (ஆஞ்ஞா) சக்கரத்தினால், உலகை ஓம்பிய - உலகமுழுவதையும் ஆளுகின்ற, பொருள் உடை - மேன்மையையுடைய, மன்னவன் புதல்வ - சக்கரவர்த்தி திருமகனே, பேர்க்கு இலா - ஒப்பதில்லாத, இருள் உடை - (துன்பமாகிய) இருளையுடைய, வைகலேம் - நாளையுடையவராயிருக்கின்றோம், இரவி தோன்றினாய் - (அத்துன்பங்களைப் போக்குதற்குச்) சூரியன்போல (நீ) எழுந்தருளினாய், அருள்உடை வீர - கருணைவடிவமான பராக்கிரமனே, யாம் நின அபயம் என்றார் - நாங்கள் உன்னுடைய அடைக்கலம் என வேண்டினார்கள்.

**குறிப்பு:**—உருள - முதனிலைத் தொழிற்பெயர். நேமி என்பது சக்கரம் என்னும் பொருளில் இங்கு ஆஞ்ஞையைக் குறித்து நின்றது. பரம்பொருளையே புத்திரனாகப்பெற்ற பாக்கியம் பற்றியே தசரத சக்கரவர்த்தியைப் "பொருளுடைய மன்னவன்" என்றார். 'அருளுடைய வீர' என்ற சொல்

லாற்றலால் சிஷ்டரைப் பரிபாலித்தல் பொருட்டு அருளையும், துஷ்டரைச் சங்கரித்தல்பொருட்டு வீரமும் பெற்றுள்ளாய் நீ என்பது பெறப்பட்டது. எங்களைக் காப்பது நின்கடமை என்பது தோன்ற 'நின்அபயம்யாம்' என்றார்.

65. (ப-ரை) பகலவன்குலமைந்தன் - சூரியமரபில் தோன்றிய ஸ்ரீ ராமபிரான், (முனிவர் விண்ணப்பத்தைக் கேட்டு) புகல் புகுந்திலரேல் - (இனிக் கொடுமை புரிவதில்லை என்று அந்த அரக்கர்) சரண்புகாதிருப்பார்களானால், புறத்து அண்டத்தின் - (இவ்வண்டத்தை விட்டு) வேறு அண்டத்தில், அகல்வரேனும் - ஓடி மறைவார்களானாலும், என் அம்பொடும் - (யான் பிரயோகிக்கும்) பாணத்தோடும், வீழ்வார் - (இறந்து கீழே) வீழ்வார்கள், ஆல் - ஆகையால், நீர் - நீங்கள், தகவு இல் துன்பம் - தகுதியில்லாத இத்துன்பத்தை, தவிருதிர் - விட்டு நீங்குங்கள் என - என்று, பணிகின்றான் - சொல்லி அருளுகின்றான்.

குறிப்பு:—அம்பொடு வீழ்வர் - அம்பினால் வீழ்வர்; ஆல் உருபு நிற்றற்குரிய விடத்துக் காரிய விரவு காட்டுதல்பொருட்டு ஒடு உருபு நின்றது உருபுமயக்கம். ஆல் - ஆகையால் என்பதின் குறுக்கம். ஏல் எனும - வினையெச்ச விகுதிகள். அம்பின் வீழ்ச்சியைக் காரணமாகவும் அரக்கர் வீழ்ச்சியைக் காரியமாகவும் வைத்துப் பொருள்கொள்ளினும் பொருந்தும். பகலவன் - பகலினை உண்டாக்குகின்றவன்; சூரியன்.

66. (ப-ரை) வேந்தன் வீயவும் - (தசரத) சக்கரவர்த்தி சாகவும் யாய்வரம் மேவும் - (கைகேயி) என்ற சிற்றன்னை விரும்பிய வரங் கேட்கவும், ஏந்தல் எம்பிவருந்தவும் - புகழுக்குடையோனாகிய என் தம்பி (பரதன்) துயரமடையவும் என் நகர் மாந்தர் - எனது நகரமாகிய (அயோத்தியில்) உள்ள சனங்களும், வல்துயர் கூரவும - கொடிய துயரத்தையடையவும், யான் வனம்போந்தது - நான் காட்டுக்கு வந்து சேர்ந்தது, என்னுடைப் புண்ணியந்தான் - எனது நல்வினைப் பயனாலேயாகும், என்றான் - என்று (ஸ்ரீ ராமபிரான்) அருளினான்.

குறிப்பு:—தாய் வரம்பெற்ற காரணத்தாலே ஸ்ரீ ராமபிரான் வனமடையப் புத்திரனது பிரிவாற்றாமையால் தசரதன் இறக்கவும் பரதன் வருந்தவும் நகரமாந்தர் துயரமடையவும் நேர்ந்தபடியால் இக்கொடுமை யனைத்திற்குங் காரணம தாய்வரமே என்றாலும் அதன்காரியம் தந்தையினது மரணமென்பது தோன்றவே ஆசிரியர் 'வேந்தன் வீயவும்' என்று முதலில் எடுத்தாண்டனர். இவ்வளவு துன்பங்கள் நேர்ந்துவிட்டனவென்றாலும் அத்துன்பங்களின் பயனிலே துஷ்ட நிக்ரக சிஷ்டபரிபாலனமென்பது தோன்ற போந்த தென்னுடைய புண்ணியம் என்றும் கூறினார். தம்பி புரியுமரசுரிமை தாம்புரியுமரசுரிமையே என்பது கொண்டு மாற்றந் தன்மையை விளக்குதற்கே என்னகர் என்றார் என்றும் மூதத புதல்வனாகிய தனக்கே அரசுரிமை உரித்தாயதுபற்றி என்னகர் என்றார் என்றும

பொருள்கொள்ளலாம். 'வீயவும்' என்பதில் 'வீ' பகுதி. போந்தது - சென்றது = இது 'வந்தது' என்னும் பொருள்தந்து நின்றது; போதரு = பகுதி.

67. (ப-ரை) அறந்தவாநெறி - தருமத்திலிருந்து தவறாத ஒழுக்கமுடைய, அந்தணர் தன்மையை - முனிவர்களது மேன்மையை, மறந்த - மறந்துபோன, புல்லர் - அற்பர்களான அவ்வரக்கர்களினது, வலிதொலையேன் எனின் - வல்லமையைப் போக்கேனாவல், இறந்து போகினும் - (நான்) இறந்து போனாலும், நன்று - நன்மையே, இது அல்லது - இஃதல்லாமல், பிறந்து - (நான் மனுடசரீரத்தில்) அவதாரங்கொண்டு, பெறும் பேறு - அடைகின்ற செல்வம், என்பது யாவதோ - என்று சொல்லப்படுவது மற்ற எதுவோ? (ஒன்றும் இல்லை என்றபடி)

**குறிப்பு:**—முனி சிரேஷ்டர்களுக்கு அரக்கர்கள் பல இடையூறுகள் இயற்றிக்கொண்டு வருகின்றனரென்பதுபற்றி "அந்தணர் தன்மை மறந்த புல்லர்" என்றார். ஏற்றேகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. 'இது அல்லது' இதுவல்லது என "முற்றுமற்றொரோவழி" என்ற சூத்திர விதியால் வகரவுடன்படு மெய் பெற்றது இங்ஙனமன்றி உவ்வலது எனப் பொருள்கொண்டு வீரமானது என விரிப்பினும் பொருந்தும்.

68. (ப-ரை) ஆவுக்கு ஆயினும் - பசுக்களைக் காத்தற்பொருட்டாயினும், அந்தணர்க்கு ஆயினும் - முனி சிரேஷ்டர்களை இரட்சிக்கும் பொருட்டாயினும், எளியவர்க்காயினும் - ஏழைகளை இரட்சிக்கும்பொருட்டாயினும், யாவர்க்கேனும் - (இவர்களைப்போன்ற) இன்னும் எவர்களைக் காக்கும்பொருட்டாயினும், சாவப்பெற்றவரே - உதவி செய்து இறக்கப்பெறுவோர்களே, தகைவானுறை - தகைமையுற்ற மேலுலகத்தில் வசிக்கின்ற, தேவர்க்கும - தேவர்களாலும், தொழும்தேவர்களாவா - வணங்கிப்போற்றத் தகுந்த தேவர்கள் ஆவார்கள்.

**குறிப்பு:**—எளியவர் - துணைவலி, தேகவலி, பொருள்வலி யற்றவர். ஆவுக்கு, அந்தணர்க்கு, யாவர்க்கு, எளியவர்க்கு = இவைகளி னீற்றிலுள்ள நான்காம் வேற்றுமை யுருபுகள் இரண்டாம் வேற்றுமைப் பொருள்தந்து நின்றமையான் உருபு மயக்கம். இவ்வுருபுகளிடையே வரும் வினைகள் முற்றும் தொகுத்தல். தேவர்க்கும் என்பது தேவராலும் எனக்குவ்வுருபு ஆல் உருபுப் பொருள்தந்துநின்றமையான் இதுவும் உருபுமயக்கத்தின்பாற்படும்.

69. (ப-ரை) சூர்அறுத்தவனும் - சூரபதுமனென்றஅசுரனைவதைத்த குமரனும், சுடர் நேமியும் - பிரகாசமுற்ற சக்கராயுதபாணியாகிய திருமாலும், ஊர் அறுத்த ஒருவனும் - திரிபுரங்களை அழித்த பரமனும், ஓம்பினும் - (எனக்கு மாறாக நின்று) எதிரிகளைக் காப்பாற்றினாலும், ஆர் அறத்திலேனும் [illegible]ந்து நின்ற தருமத்திலேனும், அன்றி - அல்லாமல், நின்றார் [illegible]யில்நின்றார் (எவராலும்), அவர் வேர்அறுப்பன் - அவர்களை வேரோடு தொலைப்பேன், நீர் வெருவன்மின் - நீங்கள் பயப்படாதீர்கள், என்றான் - என்று (ஸ்ரீ ராமபிரான்) முனிசிரேஷ்டர்களுக்கு அருளினான்.

**குறிப்பு:**—திரிமூர்த்திகளுள்ளும் பிரமன் நிக்ரகஞ் செய்யத் தெரியாதவனானது பற்றி ஆசிரியர் அவனை விலக்கிச் சூரர்களைச் சங்கரித்த சுப்பிரமணியனைக்கூட்டி யுரைத்தனர். இவ்வாசிரியர் விஷ்ணு பக்தரென்றாலும் மத துவேசமற்றவரானது பற்றியே சிவபெருமானை 'ஒப்பற்றவன்' என்ற பொருள்படக் கூறினர். பல இடங்களில் இதுபோன்று இவர் கூறியிருத்தலைப் பரக்கக் காணலாம். சிவபுராணத்தாரகளில் எவரேனும் இங்ஙனம் மறந்தேனும் கூறுவாரல்லர். நேமி - விஷ்ணுவுக்கு ஆகுபெயராய் வந்தது விஷ்ணுவே ஸ்ரீராமபிரானாயினும் "விஷ்ணுவின் அம்சங்களின் ஒருபாகமே ஸ்ரீ ராமபிரானாயவதரித்தது" என்பது விசிட்டாத்துவைதம். ஓம்பினும் என்பதி னீற்றிலுள்ள உம்மை எதிர்மறைப்பொருளது. சூர் - இது வடமொழிச் சிதைவாய்ச் சூரபத்மனைக் குறித்து நின்றது.

70. (ப-ரை) உரைத்த வாசகம் - (இவ்வாறு) ஸ்ரீ ராமபிரான் சொன்ன வாசகத்தை, கேட்டு - (இருடிகள்) கேட்டு, உவந்து - (மனது) மகிழ்ந்து, ஓங்கிட இரைதத காதலர் - அளவிடப்படாது பொஙகி யெழுந்த அன்புடையவர்களும், ஏகிய இன்னலர் - துன்பம் விலகியவர்களும், திரித்த கோலினா - (கையால்) திரிதத தண்டத்தையுடையவர்களும், தேமறை பாடினர் - தெய்வத்தன்மை தங்கிய வேதஙகளைப் பாடினார்கள், நிருத்தம் ஆடினர் - (உள்ளக்களிப்பினாலே ஆனந்தமேலிட்டுக்) கூத்தாடுகின்றவர்களாகி, நின்று விளம்புவார் - நின்று சொல்வாராகி,

**குறிப்பு:**—தேமறை என்பதற்கு ஓத ஓத மனத்திலும் நாவிலும் தித்திக்குந் தன்மையுள்ள வேதமெனினுமமை பொருநதும். கோல் எனப் பொதுப்படக் கூறினரேனும் அதனுள் ஏகதண்டம் திரிதண்டம் இவை அடஙகும். ஆனந்தம் அதிகரிததவிடததுத தன்னையறியாமலே ஆடலும் பாடலும் ஏற்படுமாகவே "நிருததமாடினர் நின்று விளமபுவார்"என்றார் ஆசிரியர்.

71 (ப-ரை) தோன்றல் - நாயகனே, நீ முனியின் - நீ சினங்கொள்வாயேயானால், புவனத்தொகை - உலகாண்டஙகளின் கூட்டம், மூன்று போல்வன - திரிலோகத்தை ஒப்பன(வாகிய), முப்பதுகோடி - முப்பது கோடி லோகாண்டஙகள, வந்து - (ஏககாலத்தில்) எதிர்தோன்றி, என்ற போதும் - எதிர்த்தபோதிலும், எதிர் அல - (அவை உனக்கு) எதிராகமாட்டா, என்றலின் - என்று தீர்மானிப்பதில, வேதம - வேதஙகளும், தவம் - தவங்களும், பெருஞானம் - விசேஷ ஞானமும், சான்று - சாட்சியாகும.

**குறிப்பு:**—வேதங்களைத் தெரிந்து அதன் ஆதாரமாகத் தவம்புரிந்து அதன் மூலமாகத தத்துவ ஞானததை யடைந்து பின்னரே ஈஸ்வரனை அறியவேணடி யிருத்தல்பற்றிச் "சான்றுவேதந் தவம்பெருஞானமே" என்றார் ஆசிரியர். அவ்வாறு ஈஸ்வரார்த்தததை முனிவர்கள் உணர்ந்திருந்தார்கள் என்பதைவிளக்கவே 'தோன்றல்'என்று விளித்தனர் என்றார். தோன்றல் - எப்பொருட்கும் முதல்வன் - இது ஆகுபெயராய் எம்பிரானைக்குறித்

தது. தோன்று=பகுதி; அல்=தொழிற்பெயர் விகுதி. "வேதங்களிலே நிர்ணயிக்கப்பட்டுள்ள திரிலோகங்களைப் போன்று எத்தனையோ அண்டாண்டங்கள் நின்னுள்ளிருந்து விரிந்து கிடக்கின்றன" என்பது தோன்ற, "மூன்று போல்வன முப்பது கோடி" என்றார் ஆசிரியர். என்ற என்பதில் என்=பகுதி. முனியில் என்ற சொல்லாற்றலினால் நீ நினைத்தாலே அரக்கர் கூட்டம் அடியோடு அழிந்து படுவர் என்ற பொருள் அடங்கிற்று.

72. (ப-ரை) அனைனது ஆகலின் - (நின் மகிமை) அத்தன்மையுடையதாதலால், எயின ஆண்டு எலாம - (நீ வனத்தில் இருந்துவரும்படி நின் சிற்றன்னை) உத்தரவிட்ட வருஷங்க ளெல்லாம், இன்னல் காத்து - (எங்களுக்குத்) துன்பம் (அணுகாதபடி) காத்துக்கொண்டு, இங்கு - இவ்விடத்தே, இனிது உரைவாய் என - இன்பமோடு வாசஞ் செய்வாயென்று, சொன்ன மாதவர் - சொல்லிய மகிமை தங்கிய முனிசிரேஷ்டர்களது, பாதம் தொழுது - அடிகளை வணங்கி, உயர் மன்னர் மன்னவன் - மேன்மைபெற்ற அரசருக்கரசனாகிய சக்கரவர்த்தியின், மைந்தனும் - குமாரனாகிய ஸ்ரீ ராமபிரானும், வைகினன் - (அதற்குடன்பட்டு) ஆங்குத் தங்கியிருந்தான்.

குறிப்பு:—"கைகேசியின் கட்டளையே உலகரட்சிப்புக்கு ஏதுவானது" என்ற பெருமைபற்றி "ஏயினவாண்டெலாம்" என்றார் ஆசிரியர். இன்னல் காத்து என்பதை இன்னல் (வாராது) காத்து என்று பொருள்கொள்க. உயர் என்ற சொல் ஈற்றடியிலுள்ள ஒவ்வொருவருடைய சிறப்புக்கும் உரித்தாய் நின்றது. மன்னாமன்னவன் - சக்கரவர்த்தி. வைகினன் - வை=பகுதி.

73. (ப-ரை) நீண்ட தமிழால் - நெடிய தமிழ்ப்பாஷையால், உலகை - உலகத்தை, நேமியின அளந்தான் - திருமாலைப்போல் அளந்தவராகிய (அகஸ்திய முனிவர்), ஆண்டகையர் - வீரராகிய ஸ்ரீ ராமலக்ஷுமணர், அவ்வயின் - அவ்விடத்தில், அடைந்தனை - சேர்ந்தமை, அறிந்தான் - தெரிந்துகொண்டவராகி, மாண்டவரதன - மாட்சிமைபுற்ற வரங்களைக் கொடுத்தருள்கின்ற (ஸ்ரீ ராமபிரான்), சரண் வழங்க - (தமக்கும் தம்போன்ற முனிவர்களுக்கும்) ஆதரவளிக்கத்தக்கபடி, ஈண்டு - அதிகரிக்கின்ற, உவகை வேலை - ஆனந்தக்கடல், தானேயேழ் உலகம எய்த - பதினான்கு லோகங்களிலும் செல்ல, எதிர்வந்தான - எதிர்கொண்டழைக்க வந்தார்.

குறிப்பு:—ஆண்டகை - ஆண்=தகை; தகை - இது சொல்லால் தொழிற் பெயரும் பொருளால் பண்புப்பெயருமாயிற்று. ஈண்டு+உவகை - வினைத்தொகை, தேவர்களும் வேதங்களும் தேடிக் காணாத் திருவடி தம்மை நோக்கி வழியவந்ததுபற்றி அகஸ்தியர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவில்லையாதலின் "உவகை வேலை எழுலகமெய்த" என்றார் ஆசிரியர். தமிழின் [illegible]மையை அளவிடமுடியாதாகவே "நீண்ட தமிழ்" என்று [illegible] கொடுத்தாரெனக் கொள்க. நேமியின - இதிலுள்ள இன் உவமப்பொருள்பற்றி வந்தது. "திருமால் உலகத்தைத் திருவடியால் அளந்ததுபோல் அகஸ்தியர் உலகத்தைத் தமிழால் அளந்தனர்" என்பது பொருள்.

74. (ப-ரை) இரைத்த - புகழ்கின்ற, மறை நான்கினொடு - வேதங்கள் நான்கினொடும், இயைந்தபிறயாவும் - (அவைகளைச) சார்ந்த மற்ற (இதிகாசங்கள்) எல்லாவற்றையும், நிரைத்த - நிரம்பக்கற்றறிந்த, நெடு - நெடிய, நிமிர்ஞானக் கல்லில் - சிறந்த அறிவாகிய கல்லினிடத்து, நெடு நாள் இட்டு அரைத்தும் - பல நாள் வைத்து அரைத்துப்பார்த்தும், அயனாலும் - பிரமதேவனாலும், அறியாத - அறியப்படாத, பொருள் - ஸ்ரீ ராமபிரானாகிய பரமபொருள், நேர்நின்று - (நமக்கு) எதிரில் நின்று, உரைக்கு உதவும் - நமது வேண்டுகோளின்படி கிருபை செய்யும், எனும் உணர்ச்சியின் - என்ற எண்ணத்தினால், உவப்பான் - அகத்தியர் மகிழ்வாராயினார்.

குறிப்பு—இரைதத - இரை=பகுதி; த=சந்தி; த்=இடைநிலை; அ=பெயரெச்ச விகுதி. சப்தித்த என்பது பொருள்; இது பகவான் குணங்களைப் புகழுகின்ற என்னும் பொருளில் வந்தது. அயனாலும் - இதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சப்பொருளில் வந்தபடியால் மற்றைய தேவர்களாலும் என்று உரைப்பது நிற்கின்றது. அறியப்படாத என்னும் செயப்பாட்டு வினை இங்கு அறியாத என்னும் செய்வினையாய்த் திரிந்தது. நிரைதத - இது நிரையக் கற்ற என்ற பொருளில் வந்தது. வேத வேதாங்கங்களை நன்குணர்ந்த அரன பிரமாதியதேவர்கள் நுணிகி நுணிகி ஆராய்ந்தும் எட்டுதற்கரிய பரம்பொருள் ஸ்ரீ ராமபிரான என்பது தோன்றவே அரன்பிரமாதியரை வினைமுதற்பொருளாகவும் அவர்களது அறிவைக கல்லாகவும் எம்பெருமான் பெருமையை அரைபொருளாகவும் உவமானப் படுத்திக் காட்டிக "கல்லினொடு நாளிட்டரைததும அறியாத" என்றார்.

75. (ப-ரை) ஆறு - நீங்காத, வெந்திறல் - கொடிய வீரத்தையுடைய, அரக்கர் விடம - இராக்கதாளாகிய விஷத்தினது, வேர முதல் அறுப்பான - வேரை அடியோடு அறுத்தெறியும் பொருட்டு, மருத்துவன் வந்தனன் - வைத்தியனாகிய ஸ்ரீ ராமபிரான் வந்தான். (ஆதலால்) இமைப்பிலா - தேவர்கள், உய்ந்தனா - பிழைததார்கள், தவத்தோர் - முனிவர்கள், உயிர்த்தனர் - பிழைத்தார்கள், அந்தணர் - இல்லற ஒழுக்கத்தில் நின்றவர்கள், அறத்தின் நெறி நின்றார் - தரும வழி (தவறாது) நின்றார்கள், என - தனிவலிப்பான - மிகவும் துணிவாராயினர்.

குறிப்பு.—உய்ந்தனா. உயிர்த்தனா, நின்றனர் முதலியன துணிவு எதிர்காலம் இறந்தகாலமாயின. நின்றனர்கள் - கள்= விகுதிமேல் விகுதி. ஆறு ஆன=பகுதி; ஆ=எதிர்மறைவிகுதி. அறுப்பான்-அறு=பகுதி; பான் வினையெச்ச விகுதி. அரக்கர்களது பெயரே இனி உலகில் இல்லாமல் தொலைப்பதற்கு ஸ்ரீ ராமபிரான் வந்தானென்பது தோன்ற "அரக்கர் விட வேர்முதலறுப்பான் வந்தனன்" என்றார் ஆசிரியர்.

76. (ப-ரை) எனை உயிர் - மற்ற உயிர்கள், ஆமமுதலயாவும் - முதலான எல்லாப் பொருள்களையும், இடைவேவித்து - இடையிலே வெந்து

நீறும்படி செய்து, ஊன் நுகர் - (அவற்றின்) மாமிசத்தைப் புசிக்கின்ற, அரக்கர் - இராட்சதர்களது, உருமைச்சுடு - இடியையும் சுடத்தக்க, சினத்தின் ஆனஅனலை - கோபத்தாலாகிய பெரும் நெருப்பை, கடிது அவித்து - சீக்கிரத்திற் தணித்து, உலகு அளிப்பான் - உலகத்திலுள்ள (பிராணிகளைக்) காப்பதற்கு, வானமழை வந்ததுஎன - ஆகாயத்தின்கண் தோன்றுகின்ற ஸ்ரீராமபிரானாகிய மேகம் வந்தது என்று நினைத்து, முந்துறும் - எதிர்கொண்டழைப்பதற்கு விரைந்து முன்வருகின்ற, மனத்தான் - மனத்தையுடைய அகஸ்திய முனிவரானவர்.

**குறிப்பு:**—உயிராம் - 'ஆம்' தனை நிரப்பவந்த அசை. முதல - முதல்= பகுதி; அ=குறிப்புப் பெயரெச்ச விகுதி. அரக்கர்கள் தங்கள் கூட்டங்களைத்தவிர மற்றைய ஜீவர்களையும் ஜீவராசிகளையும் கொன்று மாமிசங்களைப் புசிப்பவர்கள் என்பது தோன்ற "எனையுயிர் முதலயாவும்" என்றார். அவ்வப்பிராணிகளை அதனதன் அந்திய காலத்திற்கு முன்னரே பிடித்துக் கொன்று தின்று விடுவதினால் "துடைவேவித்து" என்றார். 'ஊன் - உலகு' இவை ஆகுபெயராய் மாமிசத்தையும் பிராணிகளையும் குறித்தன. "அரக்கர்கள் செய்கின்ற தீமையைக் கொடிய நெருப்பென்றும் அந்நெருப்பின் உக்கிரம் நெருப்பின் மயமான இடியையும் சுட்டுத் தகிக்கப்பண்ணுமென்றும் ஸ்ரீ ராமபிரானது கிருபையை அவித்த நெருப்பையும் குளிரச்செய்கிற மழை" என்றும் ஆசிரியர் உவமானித்து விளக்கியிருப்பது போற்றற்பாலது. ஸ்ரீ ராமபிரானது திருமேனி நீல நிறமானது பற்றி அவரை வான மழை என்று உருவகப்படுத்தினார். 'சினத்தின் ஆன அனலை' இதிலுள்ள 'இன்' சாரியை எனக்கொண்டு "கோபமாகிய நெருப்பை" எனினுமாம்.

77. **(ப-ரை)** எண்டிசையும் - எட்டுத் திசைகளும், ஏழ் உலகும் - ஏழு உலகங்களும், எ உயிரும் - அவற்றிலுள்ள எல்லா உயிர்களும், உய்ய - நல்லகதி பெறும்படி, குண்டிகையினில் - (தமது) கமண்டலத்தில், பொருவு இல் - ஈடில்லாத, காவிரி கொணர்ந்தான் - காவிரி நதியைக் கொண்டுவந்த (அகஸ்தியர்), இராமனை வரக்கண்டனன் - வந்துகொண்டிருக்கிற ஸ்ரீ ராமபிரானைக் கண்டு, கருணைகூர - (அவனிடத்து) பக்தி மேலிட, புண்டரிக வாள் நயனம் - தாமரை மலர்போன்ற பிரகாசமுடைய கண்கள், நீர்பொழிய நின்றன - ஆனந்தக் கண்ணீர் பெருக நின்றன.

**குறிப்பு**—கண்டனன் - முற்றெச்சம். காவிரி - காவேரி என்பதின் மரூஉ. அகஸ்தியர் கங்கா ஜலத்தைக் கமண்டலத்தில் கொண்டு பொதிகை சென்றபோது விநாயகக்கடவுள் காக்கையுருக்கொண்டு கமண்டலத்தைக் கவிழ்த்துவிட அக்கங்கை காவிரி எனப் பெயர்பெற்று ஓடிச் சென்றது. "நயனம் நீர் பெருக்கின்றன" என்ற சொல்லாற்றலினால் அகஸ்தியருக்கு ஸ்ரீ ராமபிரானைக் கண்டதும் பக்தி பெருகிற்று என்ற பொருளில் 'கருணைகூர' என்ற பதம் வந்ததெனக் கொள்ளப்பட்டது. கருணைகூர - இராமன் கிருபை செய எனினுமாம். கூர - கூர்=பகுதி; அ=வினையெச்ச விகுதி.

78. (ப-ரை) நின்றவனை - (நேரில் வந்து) நின்ற அகஸ்தியரை, வந்த நெடியோன் - வந்துகொண்டிருந்த ஸ்ரீராமபிரான், அடிபணிந்தான் - நமஸ்காரஞ் செய்தான், அன்று - அப்பொழுது, என்றுமுள தென்தமிழ் - எக்காலத்திலும் நிலைத்திருக்கிறதாகிய தித்தித்த தமிழை, இயம்பி - சொல்லி, இசைகொண்டான் - மகிமைபெற்றவராகிய, அவனும் - அந்த அகஸ்தியமுனிவரும், அன்பொடு தழீஇ - ஆவலோடு ஸ்ரீராமபிரானைத் தழுவிக்கொண்டு, அழுத கண்ணான் - ஆனந்தக் கண்ணீர் விட்டழுகின்ற கண்களையுடையவராய் வரவு நன்றுஎன்று - உன் வரவு நன்மையாகக் கடவதென்று, பல நல்லுரை - பல இதமான வார்த்தைகளை, பகர்ந்தான் - சொல்லித் துதிப்பாராயினர்.

குறிப்பு:—உலகளந்த திருமாலே ஸ்ரீ ராமபிரானென்பது தோன்ற வந்த நெடியோன் என்றார் ஆசிரியர். தமிழ தித்திக்குந் தன்மையுடையதாயதுபற்றி அதனைத் தேனொடு ஒப்பிட்டார்; தேன் தென் எனச் செய்யுள் விகாரம் பெற்றது, "தோன்றி மறைகின்ற மற்ற பாஷைகளைப்போலல்லாது தமிழ் ஆதிகாலந்தொட்டு ஒரு படித்தாயிருப்பது" என்னும் பெற்றி பற்றி அதனை என்றுமுள தமிழ் என்று ஆசிரியர் சிறப்படை வைத்துக் கூறினர். தழுவி என்பது தழீஇ என ஓசைநயங்கருதிச் சொல்லிசை யளபெடையாய் மருவிற்று. 'கொண்டானவன்' எனக் கொண்டுகூட்டிக் 'கொண்டவனாகிய அவன்' எனப் பொருள் கொள்ளப்பெற்றமையால் இது முற்றெச்சத்தின் பாற்படும். அன்று என்பது அப்பொழுது என்னும் பொருளில் வந்தது.

79. (ப-ரை) ஆழி உழவன் புதல்வ - ஆக்ஞா சக்கரத்தை ஏராகக் கொண்ட (தசரத சக்கரவர்த்தி) திருமகனே, இனி - இனிமேல், மறை வாழும் - வேதங்கள் வாழும், அறம் வாழும் - தருமங்கள் வாழும், மநுநீதி வாழும் - மானுடருக்கேற்பட்ட நியமங்கள் வாழும், தாழும் இமையோர் உயர்வர் - இராட்சதர்களால் தாழ்மையடைகிற விண்ணவர்கள் மேன்மை பெறுவார்கள், தானவர்கள் தாழ்வார் - இராட்சதர்கள் தாழ்வடைவார்கள், (அதன்பொருட்டு) ஏழுலகும் வாழும் - ஏழு புவனங்களும் வாழ்வடையும், ஐயமிலை - (இதிற் சிறிதும்) சந்தேகமில்லை, மெய்யே - இது சத்தியமே, (ஆதலால்) இங்குஉறைதிஎன்றான் - இங்கு தங்கியிருக்கவேண்டு மென்றார்.

குறிப்பு:—ஆழியுழவன - ஆக்ஞாசக்கரமாகிய ஏரியினாலே உலகமுழுவதையும் உழுபவன், சக்கரவர்த்தி. உறைதி - உறை=பகுதி; த=எழுத்துப்பேறு; இ=முன்னிலை ஏவலொருமை விகுதி; "வாழும் மறை, வாழும் மநுநீதி" என்பனவற்றை மறைவாழும மநுநீதி வாழும் எனத் திரித்துப் பொருள் கொள்க. தாழும - இதிலுள்ள உம் பெயரெச்ச விகுதி; மற்ற உம் விகுதிகள் அனைத்தும் வினைமுற்று விகுதிகள்.

80. (ப-ரை) இபுவனம் முற்றும் - இந்த உலகம் எல்லாவற்றையும், ஒருதட்டினிடையிட்டால் - ஒரு தராசுத்தட்டிலே வைத்து நிறுத்தாலும்,

ஒப்பு வரவிற்று என-சமத்துவமாகுமென்று, உரைப்பரிய - கூறுதற்கரிய, வாளும் - வாளாயுதத்தையும், வெப்பு உருவுபெற்ற அரன - அக்கினி உருவுபெற்றுள்ள சிவபெருமான், மேரு வரை - மகா மேரு பருவதத்தை வில் ஆ - வில் ஆகத் (தாங்கி), முப்புரம் எரித்த - திரிபுரங்களைத் தங்கு மாறு செய்த, தனி - ஒப்பற்ற, மொய்கணையும் - வலிமைபெற்றுள்ள அம்பையும், நல்கா - (ஸ்ரீ ராமபிரானுக்குக்) கொடுத்து.

**குறிப்பு:**—இட்டால் - இதிலுள்ள ஈற்றும்மை தொகுத்தல. வெப்பு - சூடு, இது சூட்டின் தன்மைக்காதாரமாகிய நெருப்புக்கு ஆதபெயராயிற்று. தனக்கென ஓர் உருவில்லான்; அடியார் விரும்பும் உருவுபெற்று வருவான் என்பது தோன்றப் பரமசிவனை "வெப்புருவுபெற்ற அரன்" என்றார் ஆழ்வார். இதனை 'மதபேதமற்ற ஞான முதிர்ச்சி' என்பர் ஆன்றோர்: இந்த ஞான முதிர்ச்சி சிவபுராணை ஆசிரியர்கள் மாட்டுக் காண்டலே அரிது.

81. (ப-ரை) மஞ்ச - மைந்தனே, ஓங்குமரன் ஓங்கி - உயர்ந்த மரங்கள் ஓங்கி (வளரப்பெற்றும்), மலையோங்கி-மலைகள் உயரப்பெற்றும், மணல் ஓங்கி - மணற்குன்றுகள் உயரப்பெற்றும், பூங்குலை உலாவு-மலர்க்கூட்டங்கள் மலிந்து கிடக்கும், குளிர் சோலை - குளிர்ச்சி பொருந்திய சோலைகள், புடைவிம்மி அருகே விளங்கப்பெற்றும், தூங்குதிரை - அசைந்தாடுகின்ற அலைகளோடுகூடிய, யாறுதவழ - ஆறுகள் பாய்ந்தோடுகின்ற, சூழலது சுற்றிடங்களையுடையதாகிய, ஓர்குன்றின் பாங்கர் - ஒரு மலையின் அருகில், பஞ்சவடி -(ஐந்து மரங்கள் கூடியுள்ள) பஞ்சவடி என்று சொல்லப்படுகிற, உறையுள் - (ஒப்பற்ற ஒரு) வாசஸ்தானம, உளது - இருக்கிறது.

**குறிப்பு:**—பஞ்சவடி- ஐந்து ஆலமரங்களின் கூட்டம்; அதனை உடைய இடத்திற்கு அது + ஆகுபெயராயிற்று. மஞ்சன் - மைந்தன் என்பதின் போலி, இது இங்கு வீரன் என்ற பொருளில் வந்தது; விளி வேற்றுமையிடத்து னகர வீறு கெட்டது. மரன் - மகரத்துக்கு னகரம் போலி.

82. (ப-ரை) கனி ஈவ - பழங்கள் தருவனவாகிய, கன்னி இளவாழை - மிக்க இளமையான வாழைத்தோப்புகளும், கதிர்வாலின செந்நெல் - கதிர்களது நீட்சியின் செந்நெற் பயிர்களும், உள - (செழித்து) இருக்கின்றன, தேன் ஒழுகுபோதும் தேன (தானே) வழிந்தோடுகின்ற, பூங்காவுகளும, உள (செழித்து) இருக்கின்றன. தெய்வம் - தெய்வத்தன்மையாகிய, பொன்னி என ஆய- காவேரி என்கிற, புனல் ஆறு உள - நீர்வளமுற்ற நதிகளும் (ஓடிக்கொண்டு) இருக்கின்றன, பொன் இவளோடு - சீதையாகிய (நின் மனைவியோடு), அன்பின் விளையாட, பிரியததோடு (கூடி) விளையாடுதற்கு, போதா - நாரைக்கூட்டங்களும், அன்னம் - அன்னப் பறவைக்கூட்டங்களும், உள - (அங்கு) இருக்கின்றன.

**குறிப்பு:**—கன்னியிள-ஒரு பொருள்பற்றி வந்த பன்மொழி; இது மிகவும் இளமையான என்னும் பொருள்தந்து நின்றது. கதிர் வாலின் என்ப

லை வாலின் கதிர் எனத் திரித்து நீண்டிருக்கிற கதிர் என்று பொருள் கொள்ளவும். கதிரையும் வாலையுமுடைய என்று பொருள்கொள்ளவும் பொருந்தும். ஈண்டு "மகாலட்சுமியே சீதையாக அவதரித்திருக்கிறாள்" என்பது தோன்றுமாறு பொன் எனக் குறிப்பாய்க் கூறினர் ஆசிரியர்.

83. (ப-ரை) ஏகி இனி - இனிச் சென்று, அவ்வயின் இருந்து - அவ்விடத்தில் தங்கி; உறைமின் என்றான் - வசியுங்கள் என்று (அகஸ்தியர்) சொன்னார், மேகநிற வண்ணனும் - மேகத்தைப்போன்ற நிறத்தோடுகூடிய ஸ்ரீ ராமபிரானும், வணங்கி (அகஸ்திய முனிவரை) வணங்கி, விடை கொண்டான் - உத்தரவு பெற்றுக்கொண்டு, பாகு அனைய - கற்கண்டை நிகர்த்த, சொல்லியொடு - சொல்லோடு கூடிய பிராட்டியோடு, தம்பி - தம்பியாகிய (இலக்குமணனும்), பரிவின்பின்போக - அன்போடு பின்னே செல்ல, முனி சிந்தை தொடர - அகஸ்திய முனிவரது மனது (அவர்கள்) பின்தொடர, கடிது போனான் - விரைவாகச் சென்றான்.

குறிப்பு:—சொல்லி - சொல் = பகுதி; இ = பெண்பாற் பெயர் விகுதி. உறைமின் - உறை = பகுதி; மின் = முன்னிலைப் பன்மை யேவல் விகுதி. கொண்டான் - கொண்டு; முற்றெச்சம். "முனி சிந்தை தொடர" என்ற பெற்றியால் "ஸ்ரீ ராமபிரான் மீது அகஸ்திய முனிவருக்கு ஏற்பட்டிருந்த பக்தியின் பெருக்கு அளவுகடந்தது" என்பது பெறப்பட்டது.

84 (ப-ரை) காவதம - காத வழிகள, பலவும் - அனைத்தையும், நடந்தனர் - (ஸ்ரீ ராமலக்ஷ்மணாகர்) நடந்து சென்று, நல் நதி - நல்ல நதிகளையும், கிடந்தன - ஒன்றோடொன்று சேர்ந்து கிடந்தனவும, நின்றன - தனித்தனி நிலையில் நின்றனவும (ஆகிய), கிரிகள் - வரைகளையும், கேண்மையின் நட்புக்கொண்டாற்போல, தொடர்ந்தன - (ஒன்றோடொன்று) தொடர்ந்தனவும், துவன்றின - நெருக்கமுற்றிருப்பனவும, (ஆகிய) சூழல் யாவையும் - இடங்கள் அனைத்தையும, கடந்தனர் - கடந்து சென்றவாகளாய், கழுகின் வேந்தை - கழுகுகளுக்கு அரசனாகிய (சடாயுவை), கண்டனர் - பார்த்தார்கள்.

குறிப்பு:—காவதம் - ஏழரை நாழிகை வழித் தூரம். 'கிடந்தனகிரிகள், நின்றன கிரிகள்' என்பன மலைகளின் பெருக்கைக் காட்டி நின்றன. சூழல் - இது ஆகுபெயராய்ச் சோலைகளைக் குறித்து நின்றது. பலவும இதிலுள்ள உம்மை முற்றுப்பொருளது. பாவங்களை நீக்குதல் நதிகளின் இயல்பாயது பற்றி 'நல் நதி' என்று அவற்றைச் சிறப்பித்துக் கூறினார் ஆசிரியா.

85. (ப-ரை) வனைகழல் - அணிந்த வீரக்கழலையும், வரிசிலை - நீட்சி பெற்ற வில்லையும், மதுகை - வீரத்தையுமுடைய, மைந்தரை - ஸ்ரீராமலக்குமணாகளை, அனையவன் கண்டு - அந்தச் சடாயு பார்த்து, புனை சடை - தரித்த ஜடையாகிய, முடியினர் - முடியோடு கூடிய இவர்கள், வினையமை நோன்பினர் - நல்வினை தீவினைகளை அறுத்தற்கேற்ற தவமியற்றும் முனிவர்கள் என்றாலோ, வில்லினர் - வில்லையுடையவர்கள், (ஆதலால்) அல்லர்

முனிவர்கள் அல்லர், புலவரோ எனு - தேவர்களோ என்று, அயிர்த்து - சந்தேகமுற்று, நோக்கினான் - பார்த்தார்.

**குறிப்பு:**—வினைகழல் அறநோன்பு, புனைசடை - வினைத்தொகைகள். கழல் - வீரர்கள் அணிகின்ற ஒர்வகைக் காலணி; கழலில் அணியப்படுவது பற்றி அவ்வணி ஆகுபெயராய்க் கழல் எனும் பெயர்பெற்றது. நோன்பு - நோன்=பகுதி; பு=பண்புப் பெயர் விகுதி. நோல் பகுதி எனக்கொண்டு நோல்பு+நோற்பு. என்றாய்ப் பின்னர் நோன்பு எனத் திரிந்ததெனவுங் கொள்ளலாம். புலவர்—விபுதர் என்னும் வடமொழிப்பெயர்ப்பு.

86. (ப-ரை) புரந்தரன் முதலிய - தேவேந்திரன் முதலான, புலவர் யாரையும் - தேவர்கள் அனைவரையும், நிரந்தரம் - எப்பொழுதும், நோக்குவென் - காண்பேன், நேமியானும் - சக்கராயுதமுடைய விஷ்ணுவும், வரந்தரும் - வேண்டிய வரங்கள் கொடுக்கின்ற, அ இறைவனும் - அந்தப் பிரமதேவனும், மழுவலாளனும் - மழுவைக் கையிடங்கொண்ட சிவபிரானும், என்னை - எனக்கு, கரந்திலர் - (தம்மை) மறைக்க மாட்டார்கள், யான் என்றும் காண்பன் - நான் எப்பொழுதும் அவர்களைப் பார்ப்பேன்.

**குறிப்பு:**—நிரந்தரம் - வடமொழி. என்னை+எனக்கு; உருபுமயக்கம். தேவர்களுக்கெல்லாம் அதிபதி இந்திரனானது பற்றிப் 'புரந்தரன் முதலிய புலவர்' என்றும் பிரம விஷ்ணு ருத்திரர்கள் பெயா மாத்திரையில் மூவராயினும் ஒருவரே என்பதுபற்றி அவர்களை அடுத்தடுத்துக் கூறியும் அவர்கள் மூவருக்கும் ஒரு முதல்வனாய் நிற்பவன் விஷ்ணுவென்பதுபற்றி "நேமியானும் அவ்வரந்தருமிறைவனும் மழுவலாளனும்" என்று முறைபிறழாதுங் கூறினார் ஆசிரியர். "நாராயணன் படைத்தான்" "நான்முகனை நான்முகனும் தான்முகமாய்ச சங்கரனைத் தான்படைத்தான்" என்பது தமிழ்வேதம்.

87. (ப-ரை) காமன் - (அழகிற்சிறந்த) மன்மதன், என்பவனையும் - என்று சொல்லப்பட்டவனையும், கண்ணின் நோக்கினேன் - கண்களால் பார்த்திருக்கிறேன், தாமரைச்செங்கண் - தாமலரபோலும் அழகிய கண்களையுடைய, இ தடக்கை வீரர்கள் - இந்த விசாலமான கரங்களையுடைய, பூமருவுபொலனகழல் - தாமரைப்பூவைப் போன்ற செவ்விய பாதங்களினது, பொடியினேனும் - தூசியினேனும், ஒப்புஆம்எனா - (அந்த மன்மதன்) நிகர் ஆவானென்று, அறிகிலேன் - நிசசயப்படுத்த முடியாதவனாக இருக்கிறேன், (ஆதலால்) இவர்ஆர்கொலாம் - இவர்கள் யாவராவரோ?

**குறிப்பு:**—காமனென்பவனையும் - உம்மை உயர்வு சிறப்பு. அங்கமழிந்த மனமதனைக் காணுதல் அருமையாயினும் 'நான் கண்டிருக்கிறேன்' என்று உறுதியிற் கூறவே கண்ணில் நோக்கினேன் என்றார். இதனால் அவன் பரமசிவனது நெற்றிக்கண் பார்வையால் சாம்பராதற்கு முன்னர் கண்டிருக்கிறேன் என்பது பெறப்பட்டது. அறிகிலன் - இல் எதிர்மறை இடைநிலை. கொல் - வியப்பைக்காட்டிநின்ற அசை. யார் ஆர்என மருவிற்று.

88. (ப-ரை) உலகுஒரு மூன்றும் - ஒப்பற்ற மூன்று உலகத்தையும்; தம் - தமக்கு, உடைமையாக்குறும் - சொந்தமாகச் செய்துகொள்ளும், அலகு அறும்இலக்கணம் - அளவற்ற மேன்மையான இலட்சணங்கள், அமைந்த மெய்யினர் - இசைந்த திருமேனியை யுடையவர்களாய், மலர் மகட்கு வமையாளோடும் - தாமரையில் உதித்த திருமகளுக்குச் சமமென்று சொல்லத்தக்க ஒரு பெண்ணுடனே, வந்த - (இங்கு) வருகின்ற, சிலைவலி வீரரை - வில்லில் வல்லமை பெற்ற இந்த வீரரை, தெரிகிலேன் - (இன்னரென்று) தெரிந்துகொள்ள முடியாதவனாகிறேன், என - என்று எண்ணி.

குறிப்பு:—சுவர்க்க மத்திய பாதாள மென்கிற மூன்றுலகத்தையும் படைத்த பிரமனைத் தமது உந்திக்கமலத்திருந்து பிறப்பித்த விஷ்ணுவின் அம்சமானபடியால் ஸ்ரீராமனை உலகொரு மூன்றும் தம்முடைமையாக் குறும் என்றார்; இங்குத் தம் என்றபன்மை இளையபெருமாளையும் உடன்கூட்டிப் பொருள் தந்து நின்றது. மலர்மகளே இங்கன மவதரித்தனளென்றாலும் அம்மலரைவிட்டு நீங்கினமையால் மலர்மகட்குவமையாளொடும் என்றார் ஆசிரியர். மலர்மகட்கு என்றவிடத்து உவமை விகாரத்தால் தொக்கது.

89. (ப-ரை) கருமலை செம்மலை அனைய - கரியமலையையும் சிவந்த மலையையும் நிகர்த்த, காட்சியர் - தோற்றமுடையவரும், திருமகிழ்மார்பினர் - இலக்குமி வசிக்கின்ற மார்பினை உடையவரும, (ஆகிய) செங்கண் வீரர்தாம் - செவ்விய கண்களுடைய இவ்வீரா, அருமைசெய் - அருமையாகச் செய்கின்ற, குணத்தின் - (நல்ல) குணங்களையுடைய, என் துணைவனை - எனது சிநேகனாகிய, ஆழியான ஒருவனை - சக்கரவர்த்தியாகிய தசரதனை, இருவரும் - இந்த இரண்டுபேர்களும், ஒத்தனர் - ஒத்திருக்கின்றார்கள்.

குறிப்பு:—ஸ்ரீராமனைக் கருமலை என்றும் இலக்குமணனைச் செம்மலை என்றும் உவமை கூறியது அவரவர் நிறத்தைப்பற்றி. திரு என்பது ஈண்டு வீரலக்குமியைக் குறித்து நின்றது. செங்கண் என்பதைச் சிவந்த தாமரை போன்ற கண் எனவும் பொருள் கொள்ளலாம். அங்ஙனமாயின் தாமரை சொல்லெச்சம். ஆழியான் என்ற சொல்லாற்றலினால் ஆகிய சக்கரத்துக்குடையவன் அதாவது - தாரக சக்கரவர்த்தியாகிய வேந்தன என்று பொருள் துலங்கவைத்தார் ஆசிரியர். அரோ - தனிநிரப்பவந்த ஈற்றசை. குணத்தின் - குணத்தையுடைய; இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கவிடத்து இன்சாரியை பெற்றது. பெண்களுக்கெல்லாம் உவமை கூறத்தக்க திருமகளுக்கும் இவள் உவமையாயதுபற்றிப் பிராட்டி ஒப்புயர்வில்லாதவளென்பது பெறப்பட்டது. அலகறு - குற்றமற்ற என்றும் பொருள் கொள்ளலாம். ஆக்குறும் - ஆக்குதல் அடையும்; தல் விகுதி விகாரத்தால் தொக்கது. உறும் - உறு பகுதி-உம் பெயரெச்ச விகுதி. மேலிரண்டடியிலுமுள்ள எண்ணும்மைகள் தொக்கன. தாம் - பன்மை அசை.

90. (ப-ரை) எனப்பல – என்றுபலவாகிய, நினைப்பின - எண்ணங்களை, மனத்துள் எண்ணுவான் - மனதில் சிந்திப்பவராய், சினப்படைவீரர் மேல் - சீற்றத்தையுடைய ஆயுதங்களோடுகூடிய வீரர்களிடத்து, செல்லும் அன்பினன் - சென்றுகொண்டிருக்கிற அன்போடு கூடியவராய், கனம் - பெருமையைப்பெற்ற, வரிசிலைபடை - கட்டமைந்த வில்லாயுதத்தை யுடைய, காளைநீவிர் - காளைபோன்ற நீங்கள், யார் - எவர், மனப்பட எனக்கு - மனதிற்படும்படி எனக்கு, உரைவழங்குவீர் - உத்தரம் செப்புங்கள், என்றான் – என்று (சடாயு) கேட்டார்.

சினம்படை, கனம்படை, மனம்பட என்பன "வேற்றுமைமப்போய் வலிமெலியுறழ்வும்" என்ற சூத்திரப்படி வலி மிகுந்தன. உள் - இடப் பொருள பற்றிவந்த ஏழனுருபு. காளை - அண்மைவிளியுமாம். மனப்பட என்றமையால் உண்மையைக் கூறவேண்டும் என்பது பெறப்பட்டது. 'காளைநீர்கள் யார், காளை நீர்கள் யார்' எனவும் பாடம்.

91. (ப-ரை) வினவியகாலையில் - (சடாயு இப்படிக்) கேட்ட சமயத்தில், புனைமலர் தாரவர் - மலர்மாலைபணிந்த இராமலக்குமணர், மெய்ம்மையல்லது - எதார்த்தமல்லாது, புகல்கிலாமையான - (மற்றொன்று) சொல்லுதல் இல்லாமையால், யாம் - நாங்கள். கனைகடல் நெடுநிலம் - சப்திக்கின்ற கடலால் சூழப்பட்ட நெடியஉலகம் அத்தனையும், காவல் - காத்தல் புரிகின்ற, ஆழியான் - ஆஞ்ஞாசக்கரதாரியாகிய, வனைகழல் தயரதன் - வீரக்கழல் தரித்த தசரதசக்கரவர்த்தியினது, மைந்தர் என்றார் - புத்திரர்கள் என்று (சடாயு அரசன் கேள்விக்கு மறுமொழி) சொன்னார்கள்.

குறிப்பு:—புனைமலர், கனைகடல், வனைகழல் முதலியன வினைத்தொகைகள். வனைதல் - அலங்கரித்தல்; இது ஈண்டு 'தரித்தல்' என்னும் பொருளில் வந்தது. தாரவர் - பெயரடியாய்ப் பிறந்து நின்ற குறிப்புப்பெயர். முன்னையபாட்டில் "மனப்படவெனக்குரை வழங்குவீர்" என்பதற்கேற்ப இப்பாட்டில் "மெய்ம்மையல்லது புகல்கிலாமையால்" என்று ஆழ்வார் புனைந்து கூறி முடித்திருக்கும் வெற்றி போற்றற்பாலது.

92. (பரை, மறக்கமுற்றாதன - (யாவராலும்) மறப்பதற்கு முடியாதனவாகிய, வாய்மைகாத்தவன - சத்தியத்தைப் பாதுகாத்துவந்த சக்கரவர்த்தி, துறக்கமுற்றான் என - சுவர்க்க பதவி அடைந்தாரென்று, முன்னம் சொல்லலும் - (சடாயு என்பவருக்கு) முன்னே சொன்ன தருணம், இறக்கம் உற்றான் என - இறந்துபோனார் என்று எண்ணும்படி, எக்கம் எய்தினன் - ஏக்கம் அடைந்தவராய், உறக்கம உற்றான என - தூக்கம் அடைந்தவனைப்போல, உணர்வு நீங்கினன் - ஸ்மரணை அறறவரானார்.

குறிப்பு:—சக்கரவர்த்தியினது சத்திய நெறிமுறையைப்பற்றிக் காலமெல்லாம் மறந்து மறந்து பார்த்தாலும் யாவராலும் அம்முறையை மறக்க முடியாது என்பது தோன்ற 'மறக்க முற்றாதனவாய்மை' என்றார். இனிச்

சத்தியவந்தர்கள் ஒருவேளை மறந்தேனும் வாய்மை தவறியிருக்கலாம்; இவருக்கு வாய்மை விஷயத்தில் அம்மறதியுமில்லை எனவும் பொருந்தும். காத்தவன் - காப்பாற்றியவன்; காத்து அவன் என வினையெச்சப்பொருள் கொள்ளினும் பொருந்தும். கைகேசித்தாய்க்குத் தாம் கொடுத்தவரம் இரண்டாதல் பற்றி முற்றுதன எனப் பன்மையிற்கூறினார். உணர்வு நீங்கினன் - உணர்வினின்று நீங்கினன் என ஐந்தனுருபுப் பொருளிலும், உணர்வைவிட்டு நீங்கினன் என இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகைப்பொருளினும் விரித்துப் பொருள் கொள்ளலாம்.

93. (ப-ரை) இருவரும் - (ஸ்ரீராமலக்குமணர்) இருவரும், தடக்கையால் - தங்களது விலாசம் பொருந்திய கைகளால், தழுவினர் எடுத்தனர் - (அச்சடாயுவை) அணைத்தெடுத்துக் கொண்டவராய், கண்ணின் நீரினால் - தங்கள் கண்களினின்றும் பெருகிவடிகின்ற ஜலத்தினாலே, முகம் கழுவினர் - அவர் முகத்தைஅலம்பினார்கள், வழுவிய - (அதுசமயம்) நீங்கியிருந்த, இன் உயிர் - இனிய உயிர், வந்தமன்னனும் - வரப்பெற்ற (ஜடாயு) அரசனும், அழிவுறு நெஞ்சினன்-அழிதல்வந்தடைந்த மனமுடையவராய், அரற்றினன்-(சக்கரவர்த்தியைப்பற்றிய பல விஷயங்களை நினைந்து) புலம்பினார்.

குறிப்பு:—மூர்ச்சை அடைந்தவர் தெளிந்தனர் என்னும் பொருளில் வழுவிய இன்னுயிர்வந்த மன்னனும் என்று வந்தது. தந்தை இறந்ததற்காகச் சடாயுஅடைகிற துக்கத்தைப்பற்றியும் ஒருவரது மரணத்தைப்பற்றியறிந்த பிறர் துக்கமுறும்போது மரணமடைந்தவரின் உரிமையாளருக்கும் துக்கம் அதிகரிப்பது இயல்புபற்றியும் ஸ்ரீராமலக்குமணரும் கண்ணீர் பெருக்கினாராகவே 'கழுவின ரிருவரும் கண்ணினீரினார்' என்றார் ஆசிரியர். தழுவினர்=எடுத்தனர்-முற்றெச்சங்கள். அரோ-தளைநிரப்பவந்த ஈற்றசை.

94. (ப-ரை) புரவலர்தம் புரவலனே - அரசர்கள் எல்லோருக்கும் அரசனே, பொய்ப்பகையே - பொய்மைக்கெல்லாம் பகைவனே, மெய்க்கு அணியே - சத்தியத்திற்கு ஆபரணமாயிருப்பவனே, புகழின் வாழ்வே - கீர்த்தி என்பது தங்குதற்கிடமாயிருப்பவனே, நின்தன் - உன்னுடைய, பரவலரும் - புகழுதற்கு அருமையாகிய, கொடைக்கும் - கொடுக்குந் தன்மைக்கும் (தானம்), பனிகுடைக்கும் - தண்ணளியுற்ற வெண்கொற்றக் குடைக்கும், பொறைக்கும் - பொறுமைக்குணத்திற்கும், நெடும்பண்பு தோற்ற - விரிந்தகுணம் தோல்வியுற்றப்பின்னடைந்த, கரவலரும்-ஒளித்தல் இல்லாத, கற்பகமும் - தேவதருவும், உடுபதியும் - சந்திரனும், கடலிடமும் - கடல்சூழ்ந்த பூமியும், களித்துவாழ - சந்தோஷம்பெற்று வாழும்படி, இரவலரும் - யாசகமாய் ஏற்பவரும், நல்லறமும் - நல்லதருமமும், யானும் இனி - இனி நானும், என்பட - என்னதுயரை அனுபவிக்க, நீத்து எங்களை) விட்டு (நீ) பிரிந்து, ஏகினையே - சுவர்க்கம் புகுந்தாயே.

**குறிப்பு:**—சக்கரவர்த்தியினது கொடைக்குக் கற்பகதருவும் குடைக்குச் சந்திரனும் பொறுமைக்குப்பூமியும் தோற்றுப்போயினவாகவே அவைகள் இனிக்களித்து வாழ நீ ஏகினை என்றார். கொடையால் ஏற்பவர்களும் குடையால் தருமமும் பொறையால் தம்மொத்தாரும் வெற்றிபெற்றிருந்தாராகவே இனிததோற்றொழிவர் என்னும் பெற்றிபற்றி "இரவலரும் நல்லறமும் யானுமினி என்பட" என்றார் ஆசிரியர். பொய்சொல்லற்காற்றாது மெய்யை நிலைநாட்டி அதனால் உயிர்துறந்தாராகவே 'பொய்ப்பகை மெய்க்கணி' என்றார். ஏகினாய் என்பது இறந்தாய் என்னும் பொருளில் வந்த மங்கலவழக்கு. ஈற்று ஏகாரம் இரக்கத்தின்பொருட்டு வந்தது. என்பட - என்ன (பாடு)பட; இதனைச் சொல்லெச்சம் என்பர். நீத்து-நீந்து = பகுதி; உ = வினையெச்சவிகுதி; பிறவினையில் மெல்லொற்று வல்லொற்றாயது.

95. (ப-ரை) அலங்காரம் என-அலங்காரம் என்று கொண்டாடும்படி, உலகிற்கு - உலகத்திற்கு, அமுதளிக்கும்- அமிர்தத்தைக் கொடுக்கின்ற, தனிக்குடையாய் - நிகரற்ற வெண்கொற்றக் குடையானே, ஆழிசூழ்ந்த - கடல்சூழ்ந்த, நிலங்காவலது - பூமியைக்காக்கின்ற தன்மையானது, கிடக்க- நிற்க, நாயகனே - (உலகத்திற்கு) இறைவனே, நிலையாத - நிலைத்தல் இல்லாத, நிலையுடையேன் - தன்மையையுடைய எனது, நேயநெஞ்சின் - அன்பு ததும்பிக்கொண்டிருக்கும் மனதின், நலம்காண - நலத்தைப் பரிசோதித்துக் காணும்பொருட்டு, நடந்தனையோ - இவ்வுலகத்தை வெறுத்துச்சென்றனையோ, தீவினையேன் - தீய செயல்களையுடைய நான், விலங்கானேன் - விலங்கினத்தைச் சார்ந்தவனாயிருக்கின்றேன், ஆதலினால் - ஆனதுபற்றி, நண்பினின்றும் - நட்பின் தன்மையிலிருந்து, விலங்கினேன் - வழுவினவனாய், இன்னும் - (உன் மரணத்தைக் கேட்டிருந்துங்கூட) இன்னமும், உயிர்விட்டிலேன் - உயிர் நீங்கிச் செத்தேனல்லேன்.

**குறிப்பு:**—உலகத்திலுள்ள அனைவர்களுக்கும் இன்பத்தை நல்குவதோர் அழகுபற்றி அந்நிகழ்ச்சியை அலங்காரமென்றார் ஆசிரியர். அமுதளித்தல் என்பது அருள்வைத்துக் காத்தல் என்ற பொருளில் வந்தது. கிடக்க வென்னும் வினையெச்சம் நடந்தனையோ என்னும் வினைமுற்றைத் தழுவிற்று. சடாயு பறவையினமானதுபற்றி எப்பொழுதும் பறந்துகொண்டே யிருக்கும் தன்மையையும் அத்துடன் ஓயாது சஞ்சரிக்கும் இயல்போடு கூடிய மன நிலையையும் அடக்கி 'நிலையாத நிலையுடையேன்' என்றார். தாமொரு பறவையாயிருந்தும் தம்மை விலங்கினமாய் வைத்துக் கூறியது பொதுவாய் மனிதப்பிறவிக்கு மாறுதலான பிறவிகள் முழுதினுக்கும் விலங்கென்னும் பெயர் வந்திருத்தல் பற்றி. விலங்கு - குறுக்கு; இது 'திர்யக்' என்ற வடசொல்லின் பெயர்ப்பு. சக்கரவர்த்திக்கும் சடாயுவுக்கும் ஏற்பட்டிருக்கிற நட்பின்தன்மை அளவுகடந்தது என்பதுதோன்ற'நேய நெஞ்சின்நலங்காண நடந்தனையோ' என்றார். நடந்தனை-மங்கலம் ஆல் அசை

96. **(ப-ரை)** செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய் - குற்றமான தன்மை தங்குதல் இல்லாத (சுத்தமான) மனதோடு கூடியவனே, தயிர் உடைக்கும் மத்து என்ன - தயிரினது கட்டிகளையுடைத்துச் சிதறும்படி செய்கிற கருவியைப்போல, உலகை கலிசம்பரனை - உலகத்தில் உள்ளவர்களை கலிய அடிக்கிற சம்பராசுரனை, தடிந்த அந்நாள் - கொன்ற அந்தக் காலத்தில், அயிர் கிடக்கும் கடல்வலயத்து - நுட்பமாகிய மணற்குவி கிடக்கின்ற கடலால் சூழப்பட்ட பூமியில், அயல் அறிய - பக்கத்திலுள்ளவர்கள் அறியும்படி, நீயுடல் நான் ஆவியென்று - நீ சரீரம் நான் ஆன்மா என்று, செப்பினாய் - சொன்னாய், நின் சொல்திறம்பா - (அவ்வாறு செப்பிய) நினது வாசகம் தவறாகாது, (என்றாலும்) உணர்வு இறந்த - அறிவிழந்த, கூற்றினார் - நமனார், உயிர்கிடக்க - உயிராகியநான் இப்பூமியில் வசிக்க, உடலை - சரீரமாகிய நின்னை, விசும்பு ஏற்றினாரே - சுவர்க்கத்திற்கொண்டு சேர்த்தாரே.

**குறிப்பு:**—உலகம் - உலகத்திலுள்ளவர்களையும் அயல் அயலில் இருந்தவர்களையும் குறித்தபடியால் இடவாகுபெயர். தடிதல் - அறுத்தல். சம்பராசுர யுத்தத்தில் சடாயு சக்கரவர்த்திக்கு உதவிபுரிந்தது பற்றி 'நான் உடல் நீ ஆவி' என்று சக்கரவர்த்தி சடாயுடன் நட்புகொண்டனர் என்பது இக்கவியில் அமைத்துக் கூறப்பட்டது. உடலைவிட்டு உயிரைக் கொண்டுபோகும் எமன் அதற்கு மாறுதலாக உயிரை வைத்து உடலைக்கொண்டுபோனானே என்ற இழிவுபற்றி "உணர்விறந்த" என்றும், அவனை இழிவு சிறப்பில் கூற்றினார் என்றும் கூறினார். ஈற்றேகாரமும் புகுவன புகுதல் என்றபடி இழிவு சிறப்புப் பொருள்தந்து நின்றது.

97. **(ப-ரை)** ஆண்டு - அப்பொழுது, அவன் ஈது உரைசெய்ய - அச்சடாயு இந்த வார்த்தையைக் கூற, அ விலங்கல் தோளார் - பருவதம் நிகர்த்த தோள்களையுடைய அந்த இராமலக்குமணர்கள், அஞ்சலித்த - வணக்கஞ் செய்த, மலர்க்கையார் - தாமரை மலர்போன்ற கைகளையுடையவராய், அன்பினோடும் - அன்புடனே, பூண்ட பெருந்துன்பத்தால் - வாய்க்கப்பெற்றிருக்கிற பெருந் துயரத்தினாலே, முறைமுறையின் - அடிக்கடி, மலர்க்கண் - தாமரை மலர் போன்ற நேத்திரங்கள், மொய்த்த நிறை நீரார் - தங்கியிருக்கிற கண்ணீரை உடையவர்களாய், பூண்ட பெரும் புகழ் நிறுவி - பொருந்தப்பெற்ற பெரிய கீர்த்தியை (உலகத்தில்) நிலைநிறுத்தி, தம்பொருட்டால் - தாம் வனம்புகுந்த காரணத்தால், மேலுலகம் - சுவர்க்கலோகத்தை, புக்க தாதை - அடைந்த தந்தை(யாகிய) தசரதன், மீண்டனன் வந்தான் அவனை - மறுபடியும் உலகினைக்கண் வந்தவனை கண்டனரே, ஒத்தனர் - பார்த்தவர்களையே போன்றார்கள்.

**குறிப்பு:**—இது என்னுஞ் சுட்டு ஈது என நீண்டது. புக்க - புகு பகுதி; அ=வினை எச்ச விகுதி; விகுதி புகுந்துழி இனவெழுத்து மிக்கது. கண்டனரே - ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. தாதை - தாத என்னும் வடமொழி விகாரம். அஞ்சலித்தல் - கூப்புதல். 'மலர்க்கை, மலர்க்கண்'

இவை இரண்டும் உவமைத் தொகைகள். திறவி - திற; அல்லது திறவு = பகுதி; இ = வினையெச்ச விகுதி. திறந்தி என்பது பொருள்.

98. (ப-ரை) வேந்தன் - சக்கரவர்த்தி, விண் அடைந்தான் எனின் - சுவர்க்கம் அடைந்தான் என்றாலுட, வீரர் நீர் - வீரத்தன்மை குன்றாத நீங்கள், எந்து ஞாலம் - தாங்கத்தகுந்த, பூமியை, இனிது அளியாது - ஆதரவோடு அரசுபுரியாது, இவண் - இவ்விடத்தில், போந்ததுஎன்னை - வந்தது என்ன காரணம், புகுந்த என் - நடந்த காரியம யாது, புந்திபோய் - புத்தி சென்று, காந்துகின்றது - வெதும்புகின்றது, கட்டுரையீர் என்றான் - நடந்தவற்றை (உள்ளவாறு) கூறுங்கள் என்று (சடாயு) கேட்டார்.

குறிப்பு:—புந்தி - புத்தி. அடைந்தானெனின் - அடைந்தானெனினும்; உம்மை விகாரத்தால் தொக்கது. புகுந்த, கட்டு - வினையாலணையும் பெயர்கள், இவை நடந்த காரியங்கள் என்னும் பொருளில் வந்தன. கட்டு - உறுதி எனினும் பொருந்தும். காந்துகின்றது என்பதில் காந்து பகுதி.

99. ப-ரை) தாதை கூறலும் - சடாயு இப்படிக் கேட்டதும், சீதை கேள்வனும் - ஜானகிமணாளனாகிய ஸ்ரீராமபிரானும் தம்பியைநோக்கினான் - சொல்லும்படி குறிப்பாய் லக்குமணனைப் பார்த்தார், அவனும் - லக்குமணனும், தன் சிற்றவை மாதரால் - தனது சிறிய தாயாராகிய கைகேசியால்' வந்த செய்கை - நேர்ந்த காரியங்களை, வரம்பு இலா - அளவு இல்லாத ஓசுவேலை ஒலிவின்று - அலைகளோடுகூடிய சமுத்திரத்தினின்றும் (கவலையிற்) குறையாது, உணர்த்தினான் - (சடாயுவுக்குத்) தெரியப்படுத்தினான்.

குறிப்பு:—முன்னொரு பாட்டில் விண்புகுந்த தந்தையே வந்தாரெனக் கண்டார் என்றமைக்கேற்ப இப்பாட்டில் சடாயுவைத் தாதை என்றனர். தாதைக்கு உயிர் நட்பாளர் ஆனதுபற்றித் தாதை என்றார் என்பதும் பொருந்தும். சிறறன்னையால் நேர்ந்த விபத்துகளை இலக்குமணன் கடலினும் பெரிய கவலையுடன் கூறினான் என்பது தோன்ற ஓதவேலை ஒழிவின்றுணர்த்தினான்' என்றார் ஆசிரியர். கேள்வன் - கேள் = பகுதி; அன் = விகுதி; வ = பெயரிடைநிலை. கேள் - அன்பு. அவை - அவ்வை = தாய்; இது செய்யுள் விகாரம்பெற்றி அவை எனத் தொகுத்து நின்றது.

100. (ப-ரை) உந்தை - நின் தந்தையாகிய சக்கரவர்த்தியை, உண்மையன் ஆக்கி - சத்தியந்தினின்று வழுவாதவராகச் செய்து, உன் சிற்றவை தந்த - உன் சிறிய தாயார் கொடுத்த, சொல்லை - உத்தரவை, தலைக்கொண்டு - சிரசில் அணிந்து, தாரணி - பூமியை, வந்த தம்பிக்கு - உடன்பிறந்த சகோதரனாகிய (பரதனுக்கு) உதவிய வள்ளலே - நல்கிய பெருந்தன்மையையுடைய ஸ்ரீ ராமனே, எந்தை - என் அப்பனாகிய நீ, வல்லது - (எந்த உலகத்திலும்) செய்யத்தகுந்த காரியத்தை, வல்லார் - செய்து முடிக்கத்தக்கவர், யாவர் என்று - வேறு யாவர் என்று (சடாயுவரசன்) வியந்து,

**குறிப்பு:**—தாரணி - தரணி என்பதின் விகாரம். சடாயு ஸ்ரீ ராமபிரானை எந்தை என்று கூறியது மகிழ்ச்சிபற்றி வந்த மரபு வழுவமைதியும, முன்னிலை இடம்பற்றிவந்த படர்க்கையுமாம். எனு - என்=பகுதி; உ= உடன்பாட்டு வினையெச்ச விகுதி. என் - "என்று" என்பதின் குறுக்கம்.

101. (ப-ரை) கேழ்கிளர் மௌலியான் - ஒளி (மிகுந்து) விளங்குகிற கிரீடந்தரித்துள்ள சடாயு, கேட்டு - (இளைய பெருமாள் சொல்லிவந்தனவற்றைக்) கேட்டு, உவந்தனன் - மகிழ்வடைந்தவராய், தோடு அலங்கலினீர் - இதழோடுகூடிய மாலையணிந்தவர்களே, வளநட்டின - வளப்பமுள்ள காட்டிலிருந்தும், துறந்தீர - நீங்கிவந்தீர், நீவிரும் - நீங்களிருவரும், நன்னுதல் தானும் - அழகிய நெற்றியையுடைய சீதாபிராட்டியும், இக் காட்டில் வைகுதிர் - இந்தக் காட்டினிடத்தே இருங்கள், யான் காக்குவன் - நான் (உங்களைப்) பாதுகாப்பேன, என்றான் - என்று சொன்னார்.

**குறிப்பு:**—கேழ் - ஒளி. உவந்தனன் - முற்றெச்சம். நல்நுதல் - நல் - இசைச்சொல் ஈண்டு அழகு என்னும் பொருள் தந்து நின்றது; நல்நுதல் என்பது சீதையைக் குறித்தமையான் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அலங்கலினீர் - அலங்கல் இன் நீர்; அலங்கல் - பூமாலை; இன்என்னும் ஐந்தனுருபு இரண்டனுருபும் பயனும் வெளிப்படு பொருளில் வந்தது உருபுமயக்கம். வைகுதிர் - வைகல்=தங்கல். தோடு - அலங்கல் - தோட்டலங்கல் "நெடிலோடுயிர்த்தொடர்க்குற்றுகரங்கள் டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்ற சூத்திரப்படி இரட்டித்தது.

102. (ப-ரை) வீரர் - ஸ்ரீ ராமலக்குமணர்கள், புவியினுக்கு அணியாய் - பூமிக்கு ஆபரணமாய், ஆன்ற பொருள் தந்து - சிறந்த வஸ்துக்களையளித்து, புலத்திற்று ஆகி - அருகே விளை நிலங்களை யுடையதாகி, அவி அகத் துறைகள் தாங்கி - பாவங்களை அவிக்கத்தக்க (புண்ணிய) நீர்த்துறைகளைக்கொண்டு, ஐந்திணை நெறி அளாவி - குறிஞ்சி முல்லை பாலை மருதம நெய்தல் என்ற ஐவகை நிலங்களினோடு கலந்து, சவியுறத் தெளிந்து - (கண்) ஒளி ஊடுசெல்லததெளிந்து, தண்ணென்று - குளிர்ச்சியுற்று, ஒழுக்கமும் தழுவி - ஒழுகுதலையும அடைந்து, சான்றோர் கவியென - புலவர்களால் பாடப்பட்ட செய்யுள்களைப்போல, கிடந்த - இருந்த, கோதாவரியினை - கோதாவரி என்னும நதியினை, கண்டார் - பார்த்தார்கள்.

**குறிப்பு:**—இச்செய்யுள் ஆன்றோர் கவியையும் கோதாவரி நதியையும் சிலேடையாகக் கூறப்பட்டிருக்கிறது. நதியை உவமானித்துக்கூறும்போது பூமிக்கு அலங்காரமாய்ச் சிறந்த மணியும் பொன்னும் ஆரமும் அகிலும் ஆகிய பொருளைக் கொடுத்தும், பக்கத்தேயுள்ள விளை நிலங்களில் தங்கி ஜீவாதாரமாகிய தானியங்களை விளைவித்தும், பாவங்களைப் போக்க வல்ல பல நீர்த்துறைகளாய்த் தங்கியும் ஐவகை நிலத்தின் வழியாய்க் கலந்து பாய்ந்தும் தெளிந்தும் குளிர்ந்தும் ஒழுகுதலையும் பொருந்தி அறிஞர்களாற்

செய்யப்பட்ட கவிகளைப்போல் இருக்கின்ற கோதாவரி என்றும் ஆன்றோர் கவியை உவமானித்துக்கூறும்போது புவியின்கண் உள்ள மாந்தர்கள் அடையவேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தமாகிய பொருள்களைக் கொடுத்தும அறிவாகிய புலங்களில் தங்கி ஜீவாதாரமாகிய ஞானத்தை விளைவித்தும் பாவங்களைப் போக்கவல்ல பல பகவநாமங்களாய்த் தங்கியும் எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்ற ஐவகை இலட்சணங்களின் வழியாய்க் கலந்து விரவியும் மனம் நிலைபெறத் தெளிந்தும் தண்ணளி பிகுந்தும் ஒழுக்கந் தழுவுதலையும் பொருந்தியது ஆன்றோர் கவி என்றும் சிலேடையாகப் பொருள் விரித்துக்கொள்க.

103. (ப-ரை) கடவுள்யாறு - தெய்வத்தன்மையுள்ள அந்தக் கோதாவரி நதி, வண்டு உறை கமலம் - வண்டுக்கூட்டங்கள் தங்குகின்ற தாமரை மலர்களாகிய, செவ்வி - அழகுடைய, வாள்முகம் பொலிய - பிரகாசமுள்ள முகம் மலர்ச்சியை அடைய, வாசம் உண்டு உறை - மணம் தங்கியிருக்கப் பெற்ற, குவளை - நீலோற்பலங்களாகிய, ஒள்கண் - பிரகாசமுள்ள கண்கள், ஒருங்கு உற நோக்கி - ஒரு துறைபுறப்பார்த்து, வழியின் - அடுத்தடுத்து, திருமலர் - அழகிய மலர்களை, தெள்திரைக்கரத்தின் - தெளிவுபெற்ற அலைகளாகிய கைகளினால், வாரித்தூவி - எடுத்து அர்ச்சனைசெய்து, செல்வர்க்கண்டு - செல்வர்களாகிய ஸ்ரீ ராமலக்ஷ்மணரைப் பார்த்து, அடிபணிவது என்ன - அவர்களது பாதங்களை (பக்திப்பேரீட்டினால்) வணங்குவது போல, பொலிந்தது - துலங்கிகொண்டிருந்தது.

குறிப்பு:—தாமரையைக் கோதாவரி நதியின் முகமாகவும குவளையை அதன் கண்ணாகவும் அலைகளை அதன் கரங்களாகவும் உவமானிக்கப்பட்டது. ஸ்ரீ ராமலக்ஷ்மணர் சீதை இவர்கள நின்ற கரையினோரம் அலைகளால ஒதுக்கப்பட்ட உதிர்ந்த மலர்கள் அடிக்கடி அவர்கள் பாதத்தில் வந்து மோதியபடியால் அந்நதி அவர்களை மலர்கொண்டு அர்ச்சித்துப் பணிந்ததுபோல் இருந்ததுபற்றி "திருமலர் தூவிப் பணிந்தது கடவுள் யாறு" என்றார் ஆசிரியர். திரை - முதனிலைத் தொழிலாகுபெயர். மலருந்தன்மையுடையது மலர்; கர்த்தாப்பொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர். கங்கை, யமுனை, காவேரி, குமரி, கோதாவரி முதலியவை புண்ணிய நதியாயது பற்றிக் 'கடவுள்யாறு' என்றார். 'தன்னொழி மெய்முன்' என்ற சூத்திரத்தின் இறுதியில் 'துணிநரு முளரே' என்றபடி கடவுளியாறு என இகரந் தோன்றாது நின்றது. செல்வர்க்கண்டு - வேற்றுமைத்தொகை.

104. (ப-ரை) ஓதிமம் - அன்னப்புள், ஒதுங்கக்கண்ட - (நாணப்பட்டு) விலகுதலைப் பார்த்த, உத்தமன் - நற்குணனாகிய (ஸ்ரீ ராமபிரான்) உழையள் ஆகும் - தன் அருகில் இருப்பவளாகிய, சீதைதன் - சீதாபிராட்டியினது, நடையை நோக்கி - (அழகிய) நடையைப்பார்த்து, சிறியது ஓர் முறுவல் செய்தான் - புன்னகைபுரிந்தான், மாதவள் தானும - சீதாபிராட்டி

யும் ஆண்டுவந்து - அக் கோதாவரி நதியின்கண் வந்து, நீர் உண்டு - தண்ணீர் சாப்பிட்டு, மீளும் - திரும்பிச் செல்லும், போதகம் - யானை, நடப்ப நோக்கி - நடந்து போவதைப் பார்த்து, புதியது ஓர் முறுவல் - (ஸ்ரீராமபிரானை நோக்கிப்) புதிதாகிய ஒரு புன்சிரிப்பு, பூத்தாள் - சிரித்தாள்.

குறிப்பு:—ஸ்ரீ ராமபிரான் ஏகபத்தினி விரதன் என்பது தோன்ற உத்தமன் என்றும் அவரது சிரிப்பைச் சிறியதோர் என்றும் பிராட்டியினது சிரிப்பைப் புதியதோர் என்றும் முன்னதைச் செய்தானென்றும் பின்னதைப் பூத்தாள் என்றும் அழகுபெறக் கூறினார் ஆசிரியர். சிறியதோர் முறுவல் புதியதோர் முறுவல்-இவை இரண்டும் புன்னகையைக் குறித்தன. / போதகம்—யானைக்கன்று; இது போதம் என்ற வடமொழியிலிருந்து வந்தது.

105. (ப-ரை) வில் இயல் - கோதண்டம் பொருந்திய, தடக்கை வீரன் - வலிமைதங்கிய கையினையுடைய வீரனுன 'ஸ்ரீராமபிரான்,' வீங்கு நீர் - நீர்ப்பெருக்குள்ள, ஆற்றின்பாங்கர் - அந்தக் கோதாவரி நதியின் பக்கத்தில்; வல்லிகள் - கொடிகள், நுடங்கக்கண்டான் - அசைவதைப் பார்த்து, மங்கைதன் - பிராட்டியினது, மருங்குல்நோக்க - இடையைப் பார்க்கவும், அண்ணல்தன் - ஸ்ரீராமபிரானது, வடிவுகண்டாள் - திருமேனியைப்பார்த்து, எல்லியங்குவளைக்கானத்து - இருண்ட நிறத்தினையுடைய நீலோற்பலக்காட்டில், இடையிடை - நடுநடுவே, மலர்ந்துநின்ற - புட்பித்திருக்கிற, அல்லியம்கமலங் கண்டாள் - (பிராட்டியும் ஆங்கே) அழகிய இதழோடுகூடிய தாமரைமலர்களைப் பார்த்தாள்.

குறிப்பு:—கண்டான் கண்டாள் - இரண்டும் முற்றெச்சங்கள். குவளைமலர் இருண்டநிற முற்றிருப்பினும் அது அழகு பெற்றது என்பது தோன்ற அம் என்ற அடைகொடுத்துக் கூறினார். ஸ்ரீராமபிரானது திருமேனி நீலநிறமென்றும அவரினது கண் கரம் முதலிய அவயவங்கள் செய்ய நிறமென்றும் பெற்றி தோன்ற குவளைக்கானத்திடையிடை மலர்ந்து நின்ற அலலியஙகமலம் என்றார். நோக்க-நோக்கு=பகுதி-அ=வினையெச்ச விகுதி. கானத்திடை - வேற்றுமைத்தொகை. அத்து - சாரியை.

106. (ப-ரை) இராமன் - ஸ்ரீராமபிரான், அனையதுஓர்தன்மையால் - அத்தன்மைத்தான உன்னத நிலைமையை (அந்நதி) பெற்றிருப்பதினாலே, அ அருவிநீர் ஆற்றின்பாங்கர் - மலையிலிருந்து வீழ்ந்தோடுகின்ற அந்தக் கோதாவரி நதியின் பக்கத்தில். பனிதரு - குளிர்ச்சி தங்கிய, படிவப்பஞ்சவடிஎனும் - அழகாகிய பஞ்சவடி என்று சொல்லப்பட்ட, பருவசசோலை - இளஞ்சோலைகள் (சூழ்ந்த), தனிஇடம் அதனைநண்ணி - நிகரற்ற ஓர்இடத்தைஅடைந்து, தம்பியால் சமைக்கப்பட்ட - இலக்குமணனால் அமைக்கப்பெற்ற, இனியபூஞ்சாலைஎய்தி - அருமையாகிய பன்னசாலையை அடைந்து, இருந்தனன் - அதில் வாசஞ்செய்துகொண்டிருந்தார், இப்பால் - பின்னர்

**குறிப்பு:**—பனிதருபடிவம் என்றமையால் ஸ்ரீராமலக்குமணர்கள் பஞ்சவடி சென்றபோழ்து பனிக்காலமாயிருந்தது என்றும் சூரிய வெப்பம் பூமியிற் படாது மறைக்கத்தக்க நெருங்கிய இலைகளடர்ந்த குளிர்ந்த சோலைகள் அடர்ந்த வனமென்றும் அரக்கர் வசிக்கின்ற இடமாதலால் மற்றையோர் வசித்தற்கு அச்சத்தைத் விளைவிக்குமிடமென்றும் பெறப்பட்டது. இனிய பூஞ்சாலை என்ற சொல்லாற்றலால் ஸ்ரீ இராமபிரானும் சீதாதேவியும் ஏகாந்தமாயிருக்கத்தக்க இடமும் இளையபெருமானாலே அமைக்கப் பெற்றிருந்தது என்ற பொருள் துலங்கிற்று. இனிய என்பது அருமையாகிய என்னும் பொருள் பற்றி வந்த வினைமாற்று. தனியிடம் என்ற சொல் புனிதரும் என்ற சொல்லுக்கு 'அச்சத்தைத் தரத்தக்க' என்ற பொருள் கூறும்படி வலியுறுத்தி நின்ற பெற்றி குறிக்கொள்ளற்பாலது.

107. (ப-ரை) மேலைநாள் - ஆதியில், உயிரோடும்பிறந்து - தன் உயிரோடு உற்பவித்து, தான்விளைகாலம் ஓர்ந்து - தான் விருத்தியாகின்ற காலத்தை அறிந்து, உடன்உறை - கூடவசிக்கின்ற, கடியநோய்அனாள் - கொரமாகிய வியாதியை ஒத்தவளாகி, நீலம்ஆம்மணிநிறம் - நீலம் என்னும் இரத்தினமணியின் நிறம்பெற்ற, நிருதர்வேந்தனை - அரக்கர்களுக்கு வேந்தனாகிய (இராவணனை) மூலநாசம்பெற - அவன் வேரோடு அழிந்துபடும்படி, முடிக்கும்மொய்ம்பினாள் - அழிக்கும் வலிமையையுடைய (சூர்ப்பநகை)

கன்மவியாதி கருவிலேயே அமைந்து அது வெளிப்படும் காலத்தில் அதிகரித்து அவனைக்கொல்லுமாகவே இராவணனுடன் பிறந்து அவனைக் கொல்லுதற்குச சூர்ப்பநகையே காரணமாவாளானதுபற்றி அவளை உடனுறை கடிய நோயினாள் என்றார் ஆசிரியர். நாசம் - நசி என்னும் பகுதியடியாய்ப் பிறந்த தொழிற்பெயர். மூலநாசம் பெற என்ற சொல்லாற்றல் இராவணனது மூலபலத்தையும் குறித்து நின்றது. மேலை—மேல் + ஐ. ஐ = சாரியை. 'வேந்தனை = முடிக்கும்' என்று கூட்டிப் பொருள் கொள்க.

108. (ப-ரை) தன்கிளைக்கு - தன்னைச்சார்ந்த சுற்றத்தவர்களுக்கு, இறுதிகாட்டுவாள் - ஆயுள்முடிவைக் காட்டுகின்ற சூர்ப்பநகை, மேலைநாள்- ஆதிகாலத்தில், எண்தகும்இமையவர் - போற்றத்தகுந்தவானவர், 'அரக்கர்- இராக்கதர்கள், எங்கள்மேல் - எங்கள்மீது. விண்டனர் - குரோதங்கொண்டார்கள், விலக்குதிஎன்ன - எங்களுக்கு அவர்களால் நேரிடும் துன்பத்தை விலக்கியருள்வாய்' என்று வேண்டிக்கொள்ள, அண்டசத்து-அனந்தசயனத்தினின்றும், அருதுயில்துறந்த - மேம்பட்ட நித்திரையைவிடுத்து இங்ஙனம் அவதாரஞ் செய்தருளிய, ஐயனை - எம்பிரானை, கண்டனள் - பார்த்தாள்.

**குறிப்பு:**—விண்டனர்-விள் = பகுதி; த் = இடைநிலை; அன் = சாரியை; அர் = பலர்பால் படர்க்கைவிகுதி. விள்ளல் - பகைத்தல். பாம்பு முட்டையில் தோன்றுவனபற்றி அண்டசமென்று கூறி ஆதிசேடனைக் குறிப்பித்தார் ஆசிரியர். அண்டசத்தருந்துயில்; - ஏழாம் வேற்றுமைத்தொகை:

அத்து சாரியை. பகவான் அனந்தன்மீது சயனித்தல் யோகநித்திரையாதலால் அதனை அருந்துயில் என்றார். ஐயன் - சுவாமி; அழகன்; ஸ்ரீராமபிரானது அழகில் மயங்கியே சூர்ப்பநகை அவனைப் பார்த்தாளென்று தோன்ற 'ஐயனைக்கண்டனள்' என்றார். கினை-உவமவாகுபெயர். எண் + தகு எண்டகு; கண்டனள் + தன்கினை; கண்டனடன்கினை; ணகரத்தின்முன் தகரம் டகரமாய்த் திரிந்தும் ளகரத்தைக்கண்ட தகரம் டகரமாய்த் திரிந்தவிடத்து அந்த ளகரம் கெட்டும் புணர்ந்த தொடர்கள்.

109. (ப-ரை) சிந்தையினுறைபவற்கு - (தனது) மனதினிடத்திற் குடிகொண்ட மன்மதனுக்கு, உருவந்தீர்ந்தது - வடிவம் (பரமசிவனது நெற்றிக்கண்ணினால் எரிபட்டு) அழிந்தது, இந்திரற்கு ஆயிரம் நயனம் - தெய்வேந்திரனுக்கு ஆயிரம் கண்கள் (இருக்கின்றன) ஈசற்கு - சிவபெருமானுக்கு, முந்திய - பழமைப்பட்ட, மலர்ககண் ஓர் மூன்று – ஒப்பற்றதாமரைபோன்றகண்கள் மூனறு (இருக்கின்றன), உந்தியின் - தனதுஉந்திக்கமலத்தினின்றும், உலகு - எல்லாப்புவனங்களையும், அளித்தாற்கு - உண்டாக்கிய மகாவிஷ்ணுவுக்கு, நான்கு தோள் – நான்கு புஜங்கள் (இருக்கின்றன), என்று - என்று கூறி, உன்னுவாள் - (ஆனால் இந்தப் புருஷன் யாவனோ என்று பலபலவாறு) ஆலோசனை செய்வாள்.

குறிப்பு:—சிந்தையிலுறைபவன் என்று கூறி மன்மதன் உருவில்லாதவனாய் ஸ்திரீ புருஷர்களுடைய மனத்தின்கண் தங்கி இச்சையை யுண்டுபண்ணுபவன் என்ற பெற்றியைப்பெறவைத்தார்ஆசிரியர். 'நயனம், மூன்று, தோள்' என்பன "இருக்கின்றன" என்னும் பயனிலையை வருவித்துப் பொருள்கொள்ள நின்றமையால் இவை சொல்லெச்சங்களாவன. உறைபவனுக்கு இந்திரனுக்கு ஈசனுக்கு உலகளித்தானுக்கு; இவைகளில் உகரச் சாரியை தொக்கவிடத்து "ணன வல்லினம் வரட்டறவும்" என்ற சூத்திரப் படி னகரம றகரமாய்த் திரிந்து நின்றன. தீர்ந்ததால் - ஆல் அசை.

110. (ப-ரை) கற்றையம் சடையவன் - திரண்டுருண்ட அழகிய சடாபாரத்தையுடைய பரமசிவன், கண்ணில் - தனது நெற்றிக்கண்ணினால், காய்தலால் - சுட்டெரித்ததால், இற்றவன் - தன் உடல் அழிந்தவனாகிய, அ அனங்கன் - அந்த அங்கமில்லாத மன்மதன், அன்று தொட்டு - அந்தக்காலத்தி லிருந்து. இன்றுகாறும் - இந்தநாள் வரையும், நல்தவம் இயற்றி - நல்ல தவத்தைச செய்து, நல் உரு பெற்றனன் - (இந்த) நல்ல உருவத்தைப் பெற்றான், ஆம் என - அதிற் சந்தேகமில்லை என, பெயர்த்தும் எண்ணுவாள் - திரும்பவும் நினைப்பாள்.

குறிப்பு:—கற்றையம் சடை - கற்றையாயும அம் என்ற நீர் தங்கியிருப்பதாயுமுள்ள சடை யென்றும் பொருள் கொள்ளலாம் - அம் - நீர் எனவே அது கங்கையைக் குறித்து நினறது. ஜடா என்னும் வடமொழி சடை எனத் திரிந்தது. இற்றவன், பெற்றவன் - இறு, பெறு = பகுதி உருப் பெற்றான் - உருவைப்பெற்றான்; இரண்டனுருபு தொக்கவிடத்து முற்று

காரத்தின்முன் 'அன்னபிறவும்' என்றபடி வலிமிக்கது. மன்மதனிலும் அழகுடையவன் ஸ்ரீராமபிரானெனும்படி நல்லுருவென்று சிறப்பித்துக்கூறினா. இற்றனன் - முற்றெச்சம். இது அவ வனங்கள் என்ற பெயரைத் தழுவிற்று.

111. (ப-ரை) அதிகம் நின்றொளிரும் - மிகுதியாக நின்று பிரகாசிக்கின்ற, இ அழகன் - இந்த அழகோடு கூடிய புருஷனது, ஆண்முகம் - பராக்கிரமமுற்ற திருமுகமண்டலம், பொதியவிழ் தாமரைப் பூவை ஒப்பதோ - இதழ் பரப்பி விரிந்த தாமரை மலரை ஒத்ததோ, கதிர்மதியாமெனில் - நிலவைத் தருகின்ற சந்திரனை ஒத்ததோ வென்றால், கலைகள் தேயும் - (அதனுடைய) கலைகள் குறைந்து குறைந்து தேய்தலை அடையும். அம்மதி எனின் - (ஒருவேளை) கலைகள் குறையாத பூரண சந்திரனோ என்றால்; மதிக்கும், அந்தப் பூரணசந்திரனுக்கும், ஓர் மறு உண்டு என்பர் - ஒரு களங்க மிருக்கிற தென்று (உலகத்தார்) கூறுவார்கள்.

குறிப்பு:—பொதி. - முதனிலைத் தொழிறபெயர். அம்மதி - சுட்டு மாத்திரமேயன்றி அம் அமிர்தம் நிறைந்தசந்திரன் எனவும்பொருள்பெறும். ஆண்முகம் ஆள்முகம் எனக்கொண்டு யாவரையும் இரட்சிக்கின்ற கிருபை நிறைந்த வதனமெனவும் பொருள் கொள்ளற்பாலது. ஒப்பதோ - ஈற்றிலுள்ள ஓகாரம் எதிர்மறைப் பொருளாயதுபற்றித தாமரை மலர்தலும் குவிதலுமுடையதாகவே ஸ்ரீராமபிரான் முகததிற்கு அது ஒப்பாகாதென்னும்பொருளை அதில் தொகுத்துப்பெறவைததார் ஆசிரியர். ஆல் - ஈற்றசை.

112. (ப-ரை) எவன் செய - (இநத மகாபுருஷன்) யாது காரியஞ் செய்தற்கு, இனிய இ அழகை - (காணுதற்கு) இன்பந்தரத்தக்க இந்த வடிவழகை, எய்தினேன் - அடைந்தவன், அவம்செய - (இத்தகைய) அழகை வீண்படுதத, திருவுடம்பு - அழகிய மேனி, அலச - வாடும்படி, நோற்கின்றான் - தவம்புரிகின்றான், நவம்செய - (எவரையும்) சிநேகஞ்செய்ய, தகைய இ நளினம் - தக்கதாகிய இந்தத் தாமரையின் மலர்போன்ற, நாட்டத்தான் - கண்களையுடைய இந்தப் புருஷோத்தமன், தவம் செய - தவததைச செய்யும்படி, தவம் செய்ததவம் - தவமென்கிற அது செய்த தவந்தான், என் என்கின்றான் - என்ன (தவமோ) என்று சொல்வாளாயினள்

குறிப்பு:—அவம் நவம் தவம் என்பன ஈற்றில் னகரம்பெற்றது ஓசைநயம்பற்றி வந்த போலி. எவன் என்னும் வினாவினைக் குறிப்பு முற்று 'என்' என வந்தது செய்யுள் விகாரம்பற்றிய இடைக்குறை. இதுவரையும் ஸ்ரீராமபிரானைத்தான் அனுபவிததற்கு முடியாது போனமைபற்றி வருந்தினள் என்பதை அவம் செய என்கின்ற சொல்லாற்றலினால் துலக்கினார் ஆசிரியர்.

113. (ப-ரை) ஒளிர் பஞ்சி - பிரகாசமுற்ற செவ்விய பஞ்சும், குளிர் விஞ்சு பல்லவம் - குளிர்ச்சி மிகுந்த இளந்தளிரும், அனுங்க (சமமாகமாட்டாது) பின்னடைய, செஞ்செவி - அழகும் சிவப்பும் பொருந்திய, கஞ்சநிமிர் - தாமரையைப் போன்று உயர்ந்த, சீறடிகள் ஆகி - சிறிய பாதங்க

ளோடுகூடியவளாகி, அஞ்சொல் - அழகிய வார்த்தை (பேசும்), இளமஞ்ஞை என - (சாயலில்) இளமையுள்ள மயிலைப்போலவும், அன்னம் என - (நடையில்) அன்னப்பேடு போலவும், மின்னும் வஞ்சியென - (இடையில்) துளிருகின்ற கொடியைப்போலவும், நஞ்சமென வஞ்சமகள் - விஷத்தைப்போன்ற வஞ்சத்தனம்படைத்த சூர்ப்பநகை, வந்தாள் - (உடனே மறைந்து மேற்சொன்ன உருவம்பெற்று) அங்கு வந்து சேர்ந்தாள்.

குறிப்பு:—செம்பஞ்சுபோன்ற சிவப்பும் பல்லவம்போன்ற மென்மையும், ஒருங்கே தாமரைக் கமைந்திருத்தல் பற்றி அவைகள் தனித்தனி ஒப்பாகமாட்டாவென்று தாமரையையே மெல்லிய பாதத்திற்குச் செஞ்செவிய கஞ்சம் என்று உவமை கூறினார் ஆசிரியர். அனுங்க - அனுங்கு=பகுதி; அ=வினையெச்சவிகுதி; இது செஞ்செவிய என்னும் பெயரைத் தழுவிய பின் ஆகி என்னும் வினையைக் கொண்டது. குளிர் - முதனிலைத் தொழிற்பெயர். பல்லவம் - தளிர்; இது வடசொல். மின்னும் - இது தளிரும் என்ற பொருள்தந்து நின்ற வினைமாறறு. இனிச் சூர்ப்பநகையை 'மகள்' என்று ஆசிரியர் கூறியது இழிவினால் வந்த உயர்வு.

114. (ப-ரை) வேதமுதல் - வேதத்தின் முதற்பொருளான ஸ்ரீராமபிரான், சேயோய் - செவ்விய அழகு படைத்தவனே, திருநின் வரவு - உயர்வு பெறத்தக்க உன்னுடைய வருகையானது, தீது இல் வரவாகுக - தீமையில்லாத வரவாகக் கடவது, போத உளது - (எங்களை ஒரு பொருட்படுத்தி நீ) வரநேர்ந்தது' எம் உழை ஓர் - எங்களிடத்திலிருக்கிற ஒரு, புண்ணியம் அது அன்றோ - புண்ணியப்பேறல்லவோ, எது பதி - உனது வாசஸ்தானம் எது, எது பெயர் - உனது திருநாமம் என்ன, யாவர் உறவு - உனக்கு எவர் இனத்தவர்கள், என்றான் - என்று கேட்டார், பேதையவள் - அறிவற்றவளாகிய அந்த அரக்கி, தந்நிலை - தனது நிலைமையை, விரிப்பாள் - (இங்ஙனங் கேட்ட ஸ்ரீராமபிரானுக்கு) விரித்துக் கூறுவாளாயினள்.

குறிப்பு:—சேயோய் - இளமைப்பருவமுடையவனே எனவும் பொருந்தும். வேதமுதல் - வேற்றுமைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பேதை என்பது மாதர்களுக்கோர் பெருமைக் குரித்தாய பெயரெனினும் ஈண்டு இவளுக்கு அறிவிலி என்னும் பொருளில் வந்தது. போத - போதா அல்லது போதரல் என்னும் பகுதியடியாய்ப் பிறந்த வினையெச்சம்.

115. (ப-ரை) பூவிலோன் - தாமரையில் இருக்கின்ற 'பிரமதேவனது', புதல்வன்- புத்திரனாகிய 'புலஸ்தியருடைய', மைந்தன் - புதல்வனாகிய 'விச்சிரவசுவி', புதல்வி - குமாரத்தி, முப்புரங்கள் செற்ற - திரிபுரத்தை எரித்தவனாகிய, சேவலோன் - காளைவாகனத்தையுடைய (பரமசிவனது), துணைவன் ஆன - சிநேகனான, செங்கையோன்-குபேரனது, தங்கை-உடன் பிறந்தவள், திக்கின்மாவெலாந் துலைத்து - திக்கஜங்களை வென்று, வெள்ளி மலையெடுத்து - கைலைமலையைப் பெயர்த்தெடுத்து, உலகம்மூன்றும் - மூன்று

லோகங்களையும், கா - காவல்புரிகின்ற, வலான் - வல்லவனாகிய 'இராவணனுக்கு', பின்னை - சகோதரி, காமவல்லியாம் - (என்பெயர்) காமவல்லி என்பார்கள், கன்னிஎன்றாள் - (நான்) கற்புக்கெடாதவள் என்றாள்,

பூவிலோன் - பூவை இல்லாகக் கொண்டவன்; பிரமன். செங்கையான் - செம்மையாகிய கையினன் - செம்மை - ஈண்டிது செல்வத்தைக் குறித்து அச்செல்வத்துக்கதிபதி குபேரன் என்ற பொருள் தந்து நின்றது. ஏதுபதி, ஏதுபெயர். எவருறவு என்ற வினாவிற்கு நேரே விடைபகர்வதாயிருந்தால் தான் எண்ணிவந்த காரியத்துக்குப் பங்கம் நேருமென்று நினைத்துத் தன் குலப்பெருமை தனப்பெருமை முதலியன உயர்த்திக் கூறும் பொருட்டுப் பிரமன் பரமசிவன் குபேரன் முதலியவரை இதிற் புனைந்து கூறினாள். தானொரு விதவையாயிருக்கிற நிலைமையில் தன்னைக் கன்னி என்று கூறியது தான் நினைத்துவந்த காரியத்துக்குப் பழுது ஏற்படக் கூடாதென்பது பற்றி. சே - என்பது எருது ஆகவே சேவலோன் என்பது அதனை வாகனமாகக்கொண்ட பரமசிவனைக் குறித்தது.

116. (ப-ரை) ஏந்தல் பொன் தோளினாய் - பெருமைக்கிருப்பிடமாகிய அழகிய தோளினை யுடையவரே!, காதலில் - ஒருவர் மேலொருவர் கொண்ட உண்மைக்காதலினாலே, கலந்தசிந்தை - ஏகமனமான, மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் - தலைவருக்கும் தலைவிகளுக்கும், மறைகளை வகுத்த கூட்டம் - வேதங்களை முறைப்படுத்திக்கூறிய விவாகத்தொகுதிகளில், காந்தர்ப்பம் என்பது உண்டு - கந்தருவவிவாகமென்ற ஒரு விவாகமிருக்கிறது, இஃது இயைந்தபின்-இந்த விவாவம் பொருந்தியபின்னர், எனக்கு மூத்த வேந்தர்க்கும் - எனக்கு முன் தோன்றியவர்களான குபேரன், ராவணன் முதலானவர்களுக்கும், விருப்புற்றதாகும் - அவர்கள் விரும்பத்தகையதேயாகும், வேறும் ஓர்உரை - இன்னுமோர் வாசகம், உண்டு என்றாள் - இருக்கிறது என்று கூறத் தொடங்கினாள்.

குறிப்பு:—எட்டுவகை விவாகத்தினுள் கந்தருவம் என்பது ஒருவகை. இது தலைவனும் தலைவியும் தாமேதம்முள் ஒருப்பட்டு மணம்புரிந்து கொள்வது. கந்தருவம் - காந்தர்ப்பமென்றது உபசாரவழக்கு. இம்மணம் எந்த வர்ணத்தார்க்கும் பொதுவாதலின் வேதத்திற் கூறியாங்குக் களவொழுக்கத்தின்பாற்படும். இவ்வாறு தலைவனும் தலைவியும தம்முள் ஒருப்பட்டுக் கூடிய இம்மணத்தைத் தாய்தந்தையர். சுற்றத்தார் முதலியோரால் தடுத்தற்கு முடியாதென்பதுபற்றி ஸ்ரீராமபிரான் குபேரன் இராவணன் முதலியவருக்குப் பயந்தவரைப்போல் விளையாட்டாயக் கூறியவற்றிற்குச் சூர்ப்பநகை இங்ஙனம் சமாதானம் கூறினாள். உண்டு + ஆல்; இதிலுள்ள ஆல் தனைநிரப்பவந்த அசை. இயைந்த - இசைந்த; இயை=பகுதி.

117. (ப-ரை) வீரன் - ஸ்ரீ ராமபிரான், வளை எயிற்றவர்களோடு - வளைந்த பற்களோடு கூடிய அரக்கிகளுடனே, வரும் - நிகழுகின்ற, விளை

யாட்டு என்றாலும் - விளையாட்டுச் செய்கையானாலும், விளைவன - (அதினால்) உண்டாகிற காரியங்கள், தீமையேயாம் என்பதை - கெடுதலை விளைவிப்பனவாம் என்பதை, உணர்ந்து - அறிந்து, நங்கை - ஏ பெண்ணே, உளைவன இயற்றல் - துயரத்திற்கிடமான காரியங்களைச் செய்தல், ஒல்லை - துன்பம், இளையவன் - என் தம்பி, உன் நிலையுணருமாயின் - உனது செய்கையை அறிந்துகொள்வானானால், முனியும் - (அவன் உன்னைக்) கோபித்துக்கொள்வான், விரைவின் - சீக்கிரதகில், ஏகுதி என்றான் - (இவ்விடத்தைவிட்டுப்) போய்விடு என்று ஸ்ரீராமன் கூறினான்.

**குறிப்பு**:—ஒல்லைஎன்பதற்குத் தளர்வு, குறைவு என்பனவும்பொருளாகவே அது ஈண்டுத் துன்பம் என்னும் பொருள்பற்றி வந்தது. இங்ஙனமல்லாமல் ஒல்லை என்பதனை சீக்கிரம் என்ற பொருளிற் கூறினால் கடைசியடியிலும் அப்பொருள் படும்படி விரைவின் என்று கூறியிருப்பதால் மிகைபடக்கூறல் என்னும குற்றத்தின்பாற்படும். மேலும் உளைவன இயற்றல் 'சீக்கிரத்தில்' என் தம்பி உணர்ந்தால் என்பதில் வந்துள்ள சீக்கிரம் அத்துணை அவசியப்படவில்லை என்பது நுணுகியுணரத் தக்கது. முனியும் - முனி = பகுதி; உம் = படர்க்கையிடத்து வந்த உயர்திணை ஒருமை வினைமுற்றுவிகுதி. எயிறு அவர் - எயிற்றவர்; றகர வீற்றுகரம் தன்னொற்று மிகுந்தது. ஸ்ரீ ராமபிரான் சூர்ப்பநகையை நோக்கி நல்லவார்த்தையாகச் சொல்லிப் போவென்றான என்பதை 'நங்கை ஏகுதி' என்ற சொலலாறறலால் துலக்கினார் ஆசிரியர். ஏகுதி; ஏகு = பகுதி; த் = எழுத்துப்பேறு; இ = முன்னிலை யிடம்பற்றிவந்த ஏவல் ஒருமை விகுதி.

118. (ப-ரை) விடியல் காண்டலின் - பொழுது விடிவதைப் பார்த்ததினால், ஈண்டு - இப்பொழுது, தன்உயிர்கண்ட வெய்யாள் - தனது உயிர் (ஆசையின் துனபத்தால்) தன்னுடலைவிட்டுநீங்காது நிற்கின்றதைப் பார்த்த சூர்ப்பநகை, படியிலாள் - ஒப்பிலாத சீதாபிராட்டி, மருங்கு உள்ள அளவு - ஸ்ரீ ராமபிரான் சமீபத்தில் இருக்கின்றவரையும், அவன் என்னைப்பாரான் - ஸ்ரீ ராமபிரான் என்னை ஏறிட்டுக் காணவும் மாட்டான், கடிதின் ஓடினன் எடுத்து - (ஆகையால் அவளைச்) சீக்கிரத்தில் ஓடி எடுத்து, ஒல்லை கரந்து - விரைவில் பதுக்கி, அவள் காதல் வடிவினனுடன் - அவளது ஆசைக்குரிய அழகனுடனே, வாழ்வதே வாழ்வு - வாழ்ந்திருப்பதுதான் சுகமான வாழ்க்கை, எனமதியா - என்று மனதில் நினைத்து.

**குறிப்பு**:—வெய்யாள் என்பது கொடியவள் என்ற பொருள் தந்ததோடு காதன்மிக்க ஸ்ரீராமபிரான்மீது வேட்கையால் வெந்தவள் என்ற பொருளையும் தந்து நின்றது "உள்ளம்போய் நாண்போய் உரைபோய் வரிநெடுங்கண் வெள்ளம்போய் வேகின்ற மென்தளிர்போல்" என்றார் புகழேந்தியாரும். அரக்கர்கள் சஞ்சரிப்பது பெரும்பாலும் இரவிலே என்பது தோன்ற விடியல் காண்டலின் என்று கூறினார். ஆசிரியர், மதியா—மதி =

பகுதி = ஆ = உடன்பாட்டு வினையெச்சவிகுதி. ஒல்லை இப்பாட்டில் இது விரைவில் என்னும் பொருளில் வந்துள்ளபெற்றியுணர்க.

119. (ப-ரை) தனி இருந்தனள் - (இவள்) தனிமையாயிருக்கின்றாள், என் சிந்தை - நான் நினைத்த எண்ணம், சமைந்தது - கைகூடிற்று, இனித்தாழ்வு உற்று இருந்து - இனிமேல் கால தாமதப்படுத்திக்கொண்டிருந்து, எனக்கு எண்ணுவது இல் எனா - நான் யோசிக்கவேண்டியது ஒன்றுமில்லை என்று, துணி இருந்த வல்மனத்தினள்—அச்சமும் தைரியமும் விரவிய மனத்தினளாகி, தோகையைத் தொடர்ந்தாள் - சீதாபிராட்டியைப் பின்பற்றி நடந்தாள், கனி இரும் பொழில் - கனிகள் மலிந்துள்ள பெரிய சோலையின்கண், காத்து - காவல் செய்துகொண்டு, அயல் இருந்தவன் - சமீபத்திலிருந்த இலக்குமணன், கண்டான-(அவ்வரக்கி பிராட்டியிடம் விரைந்து செல்லுதலைப்) பார்த்தான்.

குறிப்பு:—சமைந்தது - தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. எனக்கு - உருபுமயக்கம். இல்லை என்பது இல் எனக் கடைகுறைந்தது. தோகை - இது ஆகுபெயராய் அதனை உடைய மயிலைக்குறித்துப் பின்னர் அம்மயில் தோகைபோன்ற சாயலோடுகூடிய பிராட்டி என்று சீதையைக் குறித்தமையான் இருமடியாகுபெயர். தொடர்ந்தாள் என்ற சொல்லாற்றலினால் இவளைக்கண்டு பிராட்டி அஞ்சியோடினாள் என்பது பெறப்பட்டதுடன் அங்கனமோடிய சீதையைத் தோகை என்று ஆசிரியர் உவமானித்தபடியால் அவ்வோட்டமும் மயில்போன்ற சாயலோடு கூடியதாய் இருந்தது என்பதும் துலங்கப்பட்டது. கனி - கர்த்தாப்பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. பிராட்டியை விரட்டியோடும்போது சூர்ப்பநகைக்குத் தைரியம் இருந்தபோதிலும் "ஏதும் கெடுதல் நேரிடக்கூடுமோ" என்ற பயமும் இருந்தது என்னும் பொருளை ஆசிரியர் 'துணி யிருந்த வன்மனத்தினள்' எனக் கூறித் துலங்கவைத்தார்.

120. (ப-ரை) நில்லடீஇ எனக் கடுகினன் - (இந்த நிகழ்ச்சியைக் கண்ட இலக்குமணன்) அடி நீ நிற்பாய் என்று விரைந்துவந்து, பெண் என நினைந்தான் - (இவள் ஒரு) பெண் என்று அவன் நினைத்துக்கொண்டபடியால், வில் எடாது - வில்லைக் கையில் தொடாமல், அவள் - அந்த இராட்சசியினுடைய, வயங்கு எரி என விரிந்த - பிரகாசிக்கின்ற அக்கினிபோல் பரவியிருக்கின்ற, சில் அல் ஓதியை - நீண்டு வளர்ந்த கூந்தலை, செங்கையால் - (தனது) அழகிய கரத்தினால், திருகு உறப்பற்றி - சுற்றிக்கொள்ளுமாறு பிடித்து, ஒல் வயிறு உதைத்து - அடிவயற்றில் தனது காலினால் ஒரு உதை கொடுத்து, ஒளிகிளர் - மின்னுதல் மிகுந்த, சுற்றுவாள் உருவி - சுருள் வாளை உறையிலிருந்து (கையால்) எடுத்து.

குறிப்பு:—நில்லடீஇ எனக்கடுகினவன் அவ்வரக்கியைக் கொன்றே இருப்பானெனினும், அங்ஙனமல்லாது, அவள் சிகையைப்பிடித்ததும்

அவளை உதைத்ததும் முதலிய இவைகளைச் செய்ததற்குக் காரணம் அவளை அவன் பெண்ணென்று நினைத்ததே என்பது தோன்ற "நில்லடீஇ யெனக் கடிகினன் பெண்ணென நினைத்தான்" என்றார் ஆசிரியர். கடிகினன் முற்றெச்சம். எரி - எரிவது; வினை முதற்பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. ஆம் - அசை. ஒல்வயிறு - வயிற்றின் முடிவிடம். சில் - சிறிது; சில் + அல்; சிறிதல்லாதது. (பெரிது) இது ஈண்டுக் குட்டையல்லாதது எனனும் பொருளில் வந்த வினைமாறறு. நில்லடீஇ - உயிரளபெடை.

121. (ப-ரை) ஊக்கி - உற்சாகங் கொண்டு, தாங்கி - இலக்குமணனைத் தூக்கிச் சுமந்துகொண்டு, விண்படர்வெமென்று-ஆகாயத்தில் செல்லுவோமென்று, உருத்து - கோபித்து, எழுவாளை - எழுகின்ற அவ்வரக்கியை, நொய்தினின் - விரைவினில், நூக்கி - (பூமியில் விழத்) தள்ளி, வெய்து - (இத்தகைய) கொடிய செயலை, இழையேல் - (நீ) செய்யாதே, என நுவலா - என்று கூறி, மூக்கும் காதும் - அவளது மூக்கையும் காதையும், வெம்முரண் புயக் கண்களும் - வெப்பமுறற வலிய மார்பின் கண்களையும், முறையால் போக்கி - ஒழுங்காக அறுத்து, போக்கிய சினத்தோடும் - போகவிட்ட கோபத்துடன், (அதாவது கோபந்தீர்ந்த உடன்) புரிகுழல் விட்டான் - திருகப் பிடித்திருந்த சிகையை விட்டுவிட்டான்.

**குறிப்பு:**—இலக்குமணன் மீது இவளது ஆசை சென்றிருந்தது பற்றி அவனது கரம் இவள்மீது பட்டதும் மகிழ்வடைந்தாள் என்பது தோன்ற ஊக்கித்தாங்கி என்றார் ஆசிரியர். படர்குவம் - படர் = பகுதி: வ் = எதிர்கால இடைநிலை; எம் = தனித்தன்மைப்பன்மை இடமுற்ற வினைமுற்று விகுதி. முறையாற் போக்கி என்ற சொல்லாற்றல் முதலில் மூக்கையும் பின்னர் காதையும் பின்னர் மாரபையும் அறுத்தான் என்றும் எம்பிரானை இச்சித்ததும் பிராட்டிக்குத் தீங்கிழைக்கப் போந்ததும் தன்னை எடுத்து விண்ணிற் புக எழுந்ததுமாகிய மூன்று குற்றத்திற்கு மூன்று தண்டனை விதித்தான் என்றும் எத்தகைய தீஙகைச் செய்தாலும் பெண்ணைக் கொல்லலாகாதென்ற நியமம்பற்றி இதுசெய்தானென்றும் பொருள் தந்தது.

122. (ப-ரை) ஊற்றுமிக்க நீர்-ஊற்றிலிருந்து மிகப் பெருகிய தண்ணீர், அருவியின் - மலையிலிருந்து வடிகிற நீர்ப்பெருக்கைப்போல, ஒழுகிய- (தன் உடலினின்றும்) வடிகிற, குருதி - இரத்தத்தாலாகிய, சேறு வெள்ளத்துள் - சேறு போன்ற பெருக்கின்கண்ணே, திரிபவள் - அலைபவளாகிய (அந்த அரக்கி), ஆற்றுகிற்கிலள் - (வேதனையைப்) பொறுக்க முடியாதவளாய், தேவரும் இரிய - வானுலகத்தவரும் அஞ்சும்படி, கூற்றும் உட்கும் - எமனும் பயப்படும்படியான, தன் குலத்திேனார் பெயரெலாம் கூறி - தனது குலத்தவர்களது பெயர்களை எல்லாம் எடுத்துக் கூறி, பற்பல பன்னின்று-பலபல வார்த்தைகளையும் பேசி, அழைத்தாள்-கூப்பிடுவோளாயினள்.

குறிப்பு:—ஊறப்படுவது - ஊற்று. தேவரும் கூற்றும் இதிலுள்ள உம்மைகள் உயர்வு சிறப்புப் பொருளன. ஆற்றுகிற்கிலள் - ஆற்று=பிற வினைப்பகுதி; கில்=ஆற்றலுணர்த்து மிடைநிலை; கு=சாரியை; இல் எதிர் மறை இடைநிலை; அள் பெண்பால் படர்க்கை விகுதி. அறுபட்ட மூக்கு செவி முதலியனவற்றிக்கு ஊறறையும் இரத்தத்திற்கு அருவி நீரையும் உவ மானித்ததால் அவள் சரீரம் ஒரு மலைபோன்றது என்பது பெறப்பட்டது. 'ளவேற்றுமையில் றடவு' மென்றபடி உள்திரிபவள் உட்டிரிபவள் என்று ளகரம் திரிந்தபின் மயங்காத தகரமும் டகரமாய்த் திரிந்தது. 'குறில் செ றியாலள அல்வழிவந்த தகரந் திரிந்தபின் கெடும்' என்றபடி திரிபவள் தே வரும் திரிபவடேவரும் என்று தகரம் டகரமாய்த் திரிந்தபின் ளகரம் கெட்டது. எலாம் என்பதில் அரக்கரின் மிகுதிதுலங்கிற்று.

123. (ப-ரை) தழல் எடுத்தான் - அக்கினியைக் கையிலேந்திய (பர மசிவனது), மலை எடுத்த - வெள்ளியங்கிரியைப்பெயர்த்தெடுத்த, தனிமலை யே - ஒப்பற்ற மலைபோன்ற இராவணனே, நீ நெடுநிலத்து - நீ இந்த நெ டிய பூமியினிடத்தில், நிலை எடுத்து இருக்க - சாஸ்வத வாழ்வை வகித்தி ருக்கும்போது, தாபதர்கள் - முனிவேடங்கொண்ட இச் சிறுவர்கள், சிலை எடுத்துத் திரியும் இது - வில்லைக் கையிலேந்திக்கொண்டு (பயமின்றிச்) சஞ்சரிப்பது, சிறிது அன்றோ - உன் கௌரவத்துக்குக் குறைவல்லவோ, தேவர் எதிர்தலை எடுத்து விழியாமை - தேவர்கள் (உனக்)கெதிரில் தலை நீட்ட முடியாவகையில் (அவர்களை நீ ஜெயித்தது) சமைப்பதே - (உனக் குப்) போதுமானதாக முடிவதோ, இவை காணவாராயோ - இங்கு நான் அடைந்துள்ள என் நிலைமையைப் பார்க்க நீ வரமாட்டாயோ.

குறிப்பு:—தாபதர் - தாபஸர்; தவஞ்செய்பவர்கள். இது வடமொ ழித்திரிபு. தேவர்கள் தங்களுக்குப் பகையாயதுபற்றி இனி நான் நமது பகைவர்களாகிய தேவர்கள் முகத்தில் எப்படி விழிப்பது என்னும் பொரு ளில் "தேவரெதிர் தலை எடுத்து விழியாமை சமைப்பதோ" என்றாள் என வும் பொருள் கொள்ளலாம். ஒருவரால் ஒருவருக்கு அவமானம் நேர்ந்த விடத்து அது அவர் பகைவருக்குக் கொண்டாட்டமும் தமக்கு அதைப் பற்றியே பெருங் கவலையும் ஏற்படுவது உலகவியல்பு என்பதை ஆசிரியர் இப்பாட்டகத்தில் துலக்கியிருப்பது போற்றற்பாலது.

124. (ப-ரை) நெருப்பு - அக்கினியானது, அடியில் - (பூமியின்) கீழே, பொடி சிதற - பொரிப் பொரியாய்ச் சிதறும்படி, நிறைந்த - அதிக ரித்த, மதத் திசையானை - மதங்கொண்ட அட்டதிக்கஜங்களினது, மருப்பு ஒடிய - கொம்புகள் முறிபடவும், பொருப்பு இடிய - மலைகள் தூள்படவும், தோள் நிமிர்ந்த வலியோனே - புஜங்களைத் தூக்கி நிமிர்ந்த பராக்கிரமசா லியாகிய இராவணனே, உருப்படிவம்-அழகாகியமேனி, மன்மதனை-இரதி கேள்வனை, ஒத்துளரேயாயினும் - (ஸ்ரீ ராமலக்ஷ்மணர்கள்) ஒத்திருக்கின்

ரூர்கள் என்றாலும், உன் செருப்படியில் - உனது யுத்த பூமியில், பொடி ஒவ்வா - தூசிக்கும் இணையாகமாட்டாத, மானுடரை - இந்த மனிதர்களா கிய ஸ்ரீ ராமலக்குமணரை, சீறுதியோ - நீ கோபிப்பாயோ.

**குறிப்பு:**—ஸ்ரீ ராமலக்குமணர் திருமேனி அழகில் இவள் மதிமயங்கி னளாகவே இராவணன் கோபிப்பானாகில் இவர்களுக்கு ஏதாவது குறைவு நேருமென்றும் அங்ஙனம் நேர்ந்துவிடில் தான் எண்ணியுள்ள காரியத் திற்கு ஒருவேளை பங்கம் நேர்ந்துவிடக்கூடுமே என்றும் இவள் இதுசமயத் தும் இரங்கினாள் என்ற பொருளை 'உருப்படிவ மன்மதனை ஒத்துளரே யாயி னும்' என்ற சொல்லாற்றலால் துலக்கினார் ஆசிரியர். இராவணன் கோபத் துக்கே ஆற்றாத இவர்கள் அவனது போர்ச செய்கைக்கு எங்ஙனம் ஆற்று வர் என்பது கருத்து. செரு + படி செருகின்றபடி; வினைத்தொகை; இது வலிமிகுத்தது "இயல்பில் விகாரமும் என்னும் சூத்திரத்து அன்னபிறவும்" என்பதில் அமையும். இது அரங்கியினது கூற்றாதலின் செருப்பு + அடி எனவும் பொருள்கொள்ளச சிலேடையாகவும் கூறினார் என்பர் சிலர்.

125. (ப-ரை) கல் ஈரும்- மலைகளைத தகர்க்க வல்ல, படை - ஆயு தங்களைக்கொண்ட, தடக்கை - விலாசமுற்ற கைகளையும், அடல் - அதற் கேற்ற வலிமையையும் (கொண்ட), கரதூடணர் முதல் ஆ - கரன் தூட ணன் முதலாக, அல் ஈரும் - இருளை விலக்குகின்ற, சுடர்மணிப்பூண் - பிரகாசமுற்ற இரத்தினாபரணங்களுடைய, அரக்கர் குலத்து - இராக்கதர் குலத்திலே, அவதரித்தீர் - பிறந்தவர்களே, எல்லீரும் (நீங்கள்) அனைவர்க ளும், கொல் ஈரும்படை - கொல்லனால் செதுக்கப்பட்ட படைகளையு டைய, கும்பகருணனைப்போல் - கும்பகருண னென்பானைப்போல, குவல யத்துள் - இப் பூமியின்கண், உறங்குதிரோ - தூங்குகின்றீர்களோ, யான அழைத்தல் கேளீரோ - நான் கூவுகிற சத்தத்தைக் கேட்க மாட்டீர்களோ.

**குறிப்பு:**—கொல் - இரும்பு வேலை செய்யுந் தொழில்; இது ஆகுபெய ராய் அவ்வேலைக்காரனைக் குறித்து நின்றது. கொல்லுகின்ற ஈருகின்ற படை எனினும் பொருந்தும். கும்பகருணன் - குடம்போன்ற காதுடை யவன். 'காக்கைக் குஞ்சென்றாலும் தன்குஞ்சு பொன்குஞ்சு' என்றபடி அரக்கர் குலம் இழிகுலமாயினும் அவள் அதைப் பெரிய குலமென் றெண் ணினாள் என்பதும் இப்படியேதான் உலக இயல்பு என்பதும் 'அவதரித்தீர்' என்ற சொல்லாற்றலில் துலக்கினார் ஆசிரியர். ஆ-ஆகவென்பதின் குறுக்கம்.

126. (ப-ரை) என்றின்ன பலபன்னி - என்று இத்தகைய பல வார்த்தைகள் சொல்லி, இகல் அரக்கி - ஸ்ரீராமலக்குமணர் மேல் விரோ தம்பாராட்டுகின்ற அச்சூர்ப்பநகை, அழுது இரங்கி - அழுது துயரமுற்று, பொன் துன்னும் படிஅகத்து - அழகு துலங்கும் பூமியின் மீது, புரள்கின்ற பொழுதகத்து - (வீழ்ந்து) புரளுகின்ற தருணத்தில், வன் திண் கைச்சிலை - மிகவும் வலிமைபெற்ற கைவில்லைத் தாங்கிய, நெடுந்தோள் - நெடிய புயத்

தினையுடைய, மரகதத்தின் மலை - மரகத மலையின் நிறம்போன்ற ஸ்ரீராம பிரான், அந்த நதியகத்து - அந்தக் கோதாவரி நதியினிடத்து, அகத்து நின்று - (நிலையான) தியானத்திலிருந்து, நிறைதவத்தின் - நிறைந்த தவத்தினது, குறைமுடித்து - மீதத்தைப் பூர்த்திசெய்து, வந்தான்-ஆங்குற்றான்.

குறிப்பு:—பொன்துன்னும் படியகத்து என்பதற்குச் சீதாபிராட்டி இருக்கின்ற இடத்தில் எனவும் பொருந்தும். பொழுதகத்து - அகம்; ஏழனுருபுப் பொருளது. அரக்கி போடுகின்ற சத்தத்தால் அவள் தங்களைப் பற்றிப் பேசுகிற விஷயமுற்றினும் ஸ்ரீராமபிரான் கேட்டு அறிந்துகொண்டிருந்தானென்றும் 'ஏதோ என்னமோ' என்று விரைந்து வராமல் வைதிகச சடங்கினைப் பூர்த்திபண்ணியே வந்தானென்றும் கொள்ளுமாறு நிறைதவத்தின் குறை முடித்து என்ற சொல்லாற்றலால் துலங்கவைத்தார் ஆசிரியர். மரதகம்; மரகதம் - எழுத்து நிலைமாறறம். மலை - ஸ்ரீ ராமபிரானுக்கு உவமையாகுபெயர். வன் திண்-இரண்டும் ஒரு பொருட்சொற்களெனினும் ஈண்டு, ஒரு சொற்பொருளையே வலியுறுத்தி நின்றன.

127. (ப-ரை) வந்தானை - வந்த ஸ்ரீ ராமபிரானை, இடைநோக்கி - இடையே பார்த்து, வயிறு அலைத்து - அடிவயிற்றைப் பிசைந்துகொண்டு, மழைக்கண்ணீர் - மழை பொழிவதுபோல் பொழிகின்ற தனது கண்களின் நீரினால், செந்தாரைக் குருதியொடு - தாரை தாரையாய் வடிந்துகொண்டிருக்கிற இரத்த வெள்ளத்தோடு, செழுநிலத்தை - செழிப்பாகிய (நல்ல) பூமியை, சேறு ஆக்கி - சேறு படும்படி செய்து, எந்தாய் - எனது யஜமானனாகிய (ஸ்ரீராமபிரானே), அந்தோ - ஐயையோ, உன திருமேனிக்கு-உனது அழகிய வடிவுக்கு அன்பு இழைத்த - அன்பினைச் செய்த, வன்பிழையால் - (இந்த) வலிய தப்பிதத்தினால், இது - இததுனபம், யான் பட்டபடி காண் - யான் அடைந்த விததத்தைப் பார்ப்பாய், என்று எதிர்விழுந்தாள் - என்று எதிரே விழுந்துகொண்டு (புரண்டழுதாள்).

குறிப்பு:—எந்தாய் - சிறப்பில் வந்த மரபுவழுவமைதி. அந்தோ இரக்கப் பொருளுணர்த்து மிடைச் சொல். எநதாய் யான்=எந்தாயான் யகரத்தின்முன் யகரம் கெட்டது. "யரழ முன்னர்' என்னும் சூத்திரத்து "மேல்" என்றதனு லமையும். சூர்ப்பநகை ஸ்ரீ ராமபிரானுக்கு ஏதோ தான் நன்மை செய்யப் புகுந்ததாகவும் அதன் பொருட்டுத் தன்னைப் போற்றிப் பாராட்டவேண்டியதிருக்க அதை விடுத்து இலக்குமணன் இப்படி அவமானஞ்செய்துவிட்டானென்றுங் கருதி எம்பிரான் வந்ததும் சலிப்புச் சொல்வதுபோல் சொன்னாளென்பதும் பெரும்பாலும் ஸ்திரீகளுடைய குணம் இங்ஙனமே என்பதும் "அந்தோ உன் திருமேனிக் கன்பிழைத்த வன்பிழையால்" என்ற சொல்லாற்றலில் துலக்கினார் ஆசிரியர். அன்பு செய்த நன்மைக்கு இளையபெருமான் துன்பிழைத்தான் என்று அவள் முறையிட்

டுக்கொண்டாள் என்பது இதன் பொருள். வந்தானே - வினையாலணையும் பெயர். வயிறலைத்தல் - வயிற்றில் அடித்துக் கொள்ளுதல். பொதுவாக ஸ்திரீகளது பேதமைக்குணத்தில் இது ஒன்று.

128. (ப-ரை) பேடிப்போர் வல்லரக்கர் - பேடித்தன்மையான போர் புரிவதில் வலிய இராட்சதர்களது, பெருங்குலத்தை - பெரிய கும்பல்களை, ஒருங்கு அவிப்பான் - வேரோடு மடிக்கும்பொருட்டு, தேடிப்போந்தனம் - (யாம்) வலியவந்திருக்கின்றோம், இன்று - (ஆதலால்) இப்பொழுது, தீமாற்றம் சில விளம்பி - கொடுமையான வார்த்தைகள் சிற்சில சொல்லி, வீடிப் போகாது - (வீணாக) இறந்துபோகாமல், இ மெய் வனத்தை விட்டு - இந்த உண்மையான வனத்தை விட்டு, அகலஓடிப்போ - தூரமாக ஓடிப்போய் விடு, என்று உரைதத - என்பதாகச் சொன்ன, உரை கடந்தாறகு - வேதங்களால் அளவிட்டுக் கூறுதற்கு எட்டாத ஸ்ரீ ராமபிரானுக்கு, அவள் உரைப்பாள் - அந்த அரக்கியாகிய சூர்ப்பநகை கூறத்தொடங்கினாள்.

**குறிப்பு:**—போரில தோல்விகண்டால் ஓடுவதாகப் போக்குக் காட்டி ஆகாயத்திலும மறைந்து போர் செய்ய வல்லவர்கள் அரக்கர்கள் என்றும் அத்தகைய போரின் தன்மை ஆண்மையுமன்று பெண்மையுமன்று என்றும் பொருள்கொளளுமாறு 'பேடிப்போர் வல்லரக்கர்' என்றார் ஆசிரியர். அவிப்பான் - அவி பகுதி; பான் எதிர்காலங் காட்டிவந்த வினையெச்ச விகுதி. பஞ்சவடி முதலிய வனங்களில் முனிவர்கள் தவஞ் செய்துவருகின்றபடியால் அவைகளை மெய வனம் என்று சிறப்பித்துக் கூறப்பட்டது வீடல் - சாதல். வீடி - வீடு=பகுதி; இ=வினையெச்ச விகுதி உரைகள் + தந்தான் எனப் பிரித்து வேதங்களைக் கொடுத்தவன் என்றும்பொருள்கொள்ளலாம்.

129. (ப-ரை) இருந்த - (ஜநஸ்தானத்தில்) வசித்திருந்த, மாகரன் - பெரிய சரீரத்தோடு கூடிய கரனென்னும அரக்கர் தலைவனது, தாளிணையின் மிசை - இரண்டு பாதஙகளின்மீது, சொரிந்த சோரியள் - வடிந்தோடிய இரத்தவெள்ளத்தோடு கூடியவளும், (சொரிந்த) கூந்தலள்-நீண்ட கூந்தலோடு கூடியவளும், தூம்பு என - நீரோடையைப்போல, தெரிந்த மூக்கினள்வாயினள் - காணப்பட்ட மூக்கோடும் வாயோடும் கூடியவளும் (ஆகிய சூர்ப்பநகை) செக்கர் - செம்மேகமானது, மேல் விரிந்த - மேலே படர்ந்திருக்கிற, மேக மென விழுந்தாள் - (கரு)மேகத்தைப்போல வீழ்ந்தனள்.

**குறிப்பு:**—சூர்ப்பநகையின் சரீரம் கருப்பாயும் அவள் கூந்தல் செம்பட்டையாயும் அவள் மீது சொரிந்து வடிந்துள்ள இரத்தம் செகப்பாயும் இருந்தனபற்றிச "சொரிந்த சோரியள் கூந்தலள் செக்கர்மேல் விரிந்த மேகம் என வீழ்ந்தாள்"என்றார் ஆசிரியா. கூந்தலும் இரத்தமும் செம்மேகம் என்று உவமானித்தபடியால் விரிந்த மேகமென்று உவமானித்த அவள் சரீரம் "கருநிறம் உள்ளது" என்பது பெறப்பட்டது. அரோ - ஈற்றசை.

130. (ப-ரை) இருவர் மானுடர் - இரண்டு மனிதர்கள், தாபதர் - தபவேடம் பூண்டவர்கள், ஏந்திய - தாங்கிக்கொண்டிருக்கிற, விரி வில் வாள் கையர் - நீட்சிபெற்ற வில்லோடும் வாளோடும் கூடிய கையினர், மன்மதன் மேனியர் - இரதி கேள்வன்போலும் (அழகுபடைத்த) திருமேனியுடையவர்கள், தருமநீரர் - நல்ல குணமுள்ளவர்கள், தயரதர்காதலர் - தசரத சக்கரவர்த்தியினது புத்திரர்கள், செருவில்நேரும் - போரில்எதிர்ப்படுகின்ற, நிருதரைதேடுவார் - இராட்சதர்களைத் தேடித் திரிபவர்கள்.

குறிப்பு:—தனக்குத் துன்பத்தைச் செய்த ஸ்ரீ ராமலக்குமணரைத் தண்டிக்க வேண்டும் என்பது அவள் முறைப்பாடாய் இருந்தாலும் அவர்கள் மீது தனக்குள்ள ஆசை மிகுதிபற்றி மன்மதன் "மேனியர், தருமநீரர்" என்று விசேடித்தாள். இப்பாட்டில் இருக்கின்றார் என்பது சொல்லெச்சம்.

131. (ப-ரை) ஓங்கு அறம் நின்று - உயரும் தருமமார்க்கத்தில் ஒழுகுபவராயிருந்து, நோக்கி - அத்தருமநெறி தவறுகிற இடங்களை ஆராய்ந்து, நிறுத்தும் நினைப்பினர்-(அவ்விடங்களில் மீண்டும் தருமத்தை) நிலைநிறுத்துகின்ற நோக்கமுடையவர்கள், வென்றிவேல்கைநிருதரை - வெற்றிபொருந்திய வேலேந்தும் கரங்களுடைய இராட்சதர்களை, வேரறக்கொன்று - (அவரை) அடியோடு மாய்த்து நீக்குதும் என்று - தொலைத்துவிடுவோம் என்று, உணர் கொள்கையார்-கருதுகின்ற கோட்பாட்டை உடையவர்கள், உன்வலிஒன்றும் நோக்கலா - உனது (படைவரம் முதலிய கணக்கற்ற) புஜபலபராக்கிரமங்களில் எதையும் மதியாதவர்கள்.

குறிப்பு:—ஸ்ரீராமலக்குமணருடைய வீரம் தவம் அறம் பெருமை நோக்கம முதலியவற்றை அரக்கி எடுத்துப் புகழ்ந்தாள் எனினும் அவை அனைத்தும் நின்பலத்திற்கு முன்நில்லாதென்னும் பொருளில் கரனை அவள் துதித்தாள் என்னும் பெற்றி தோன்ற "ஒன்றும் நோக்கலருன்வலி" என்ற அடியில் துலங்கவைத்தார் ஆசிரியர். ஓங்கறம் - வினைத்தொகை. நீக்குதும் - நீக்கு=பகுதி; தும்=எதிர்காலம் காட்டிநின்ற தன்மைப் பன்மை விகுதி. நோக்கலா - நோக்கு=பகுதி; அல்=எதிர்மறைஇடைநிலை; அர்= பலர்பால் படர்க்கை விகுதி. அறன் - அறம்; மகரத்துக்கு னகரம்போலி.

132. (ப-ரை) ஒருபேதை - (அவர்களோடு) ஒரு பெண் மணி, மண்ணில் – பூமியிலும, நோககருவானினில் - காணுதற்கரிய தேவலோகத்திலும், மற்றினில் - மற்றைப்புவனஙகளிலும், எண்ணி நோக்குறின் - (அவளுக்கு இணை இருபபரோ என்று) யோசித்துப் பார்க்குமிடத்து, யாவர்க்கும் நோக்கலா - எவருக்கும் காணமுடியாத, பெண்ணின் நோக்கு உடையாள் - பெண்களது எல்லா அழகையும் உடையவளாகி, என் கண்ணின் நோக்கி - என்னுடைய கண்களாலும கண்டு, உரைப்பரும் காட்சியாள் - (அளவிட்டுக்) கூறுதற்கமையாத அழகினையுடையவளா யிருக்கின்றாள்.

குறிப்பு:—"என் கண்ணினோக்கி யுரைப்பருங் காட்சியாள்" என்று ராகவின் இவ்வாக்கி எல்லா உலகத்திலுஞ்சென்று சஞ்சரிக்கக் கூடியவள் என்பது பெறப்பட்டது. மண்ணில் வானில் என்றபடியால் மற்றினில் என்பது மற்றை உலகம் எனப்பொருள் தந்து நின்றது. வானில் - வானி னில்; இன் சாரியை. உரைப்பரும் - உரைப்ப அரும்; அகரந்தொக்கது.

133. (ப-ரை) கண்டு - (நான் அவளைப்) பார்த்து, இலங்கையர் கோக்கு - இலங்கையிலே வசிக்கப்படுகிற அரக்கர்களுக்கெல்லாம் அரசனு யிருக்கிற இராவணனுன என் அண்ணனுக்கு(சேர்ப்பித்தல் பொருட்டு), நோக்கருங் காரிகையாள் தனை - பார்ப்பதற் கரிமையாகிய அந்தப்பெண்கள் நாயகத்தை, கொண்டுபோவல் என - எடுத்துக்கொண்டு போவேன் என்று எண்ணி, விண்டு - வெளிப்பட்டு, மேல் விழுந்தேனை - அவள்மீது பாய்ந்த என்னை, அவர் வெகுண்டு - அம்மனிதர்கள் (என்னைக்) கோபித்து, மூக்கு (என்) மூக்கினை, துண்டம் ஆக்கினர் - (இப்படித்) துணித்தெறிந்து விட்ட னர், எனச் சொல்லினள் - என்று முறையிட்டாள்.

குறிப்பு:—காரிகையாள் + தனை; காரிகையாடனை "குறில்செறியா லள அவ்வழிவந்த" என்ற சூத்திரப்படி நிலைமொழி யீற்று ளகரத்தைக் கண்ட தகரம் டகரமாய்த் திரிந்தபின் அந்த ளகரம் கெட்டது. போவல்- போ=பகுதி; அல்=தன்மை யொருமை விகுதி. மூக்கு - மூக்கை இரண் டன் உருபு தொக்கது. மூக்கை மாத்திரம் அறுத்துவிட்டதாகச சொன்னாள் எனினும் மற்றையவைகளையும் அறுத்துவிட்டதாகச் சொன்னளென்று வது அல்லது அறுபட்ட அவற்றைக் கரன பார்த்தானென்றுவது கூட்டிப் பொருள் கொள்க. கோ - அரசன்; கு - நான்கன் உருபு சாரியைபெறு து "இயல்பினும் விதியினும" என்ற சூத்திரப்படி ினஒற்று மிகுந்தது.

134. (ப-ரை) விடைச் சங்கரற்கும் - காளை வாகனத்தை யுடைய பரமசிவனுக்கும, தடுப்பருந் தன்மையான் - அடக்குதற்கும் முடியாத நிலை மையான, வெங்கரப் பெயரோன் - கொடியவிஷம் போன்ற கரன் என் னும் பெயரோன், அங்கு - (மானுடனோடு போர்புரிந்த) அவ்விடத் (தும்), அரக்கர் - அசுரர்கள், அவிந்து அழிந்தாரென - துன்பப்பட்டு இறந்து போனுர்கள் என்று, பொங்கு அரத்தம் - ததும்பி வடியும் இரத்தமானது, விழிவழிபோந்து உக - கண்களின் வழியாகக் கொப்பளித்துக் கக்கும்படி, வெகுண்டான் - (மிகவும்) கோபித்து நின்றான்.

குறிப்பு:—அங்கும் உம்மை விகாரத்தால் தொக்கது. அவிந்தார் என்ற விடத்து வினவுருபு தொகுத்தல் எனினும் பொருந்தும். சங்கரற்கும் உம் மை உயர்வு சிறப்பு. திருப்பாற் கடல் கடைந்த சமயத்து எழுந்த ஆலகால விஷத்தைச் சங்கரன் உண்டு அதன் வேகத்தைத் தடுத்தாராகவே அவ்வி ஷத்தைக் காட்டிலும் இவன் கொடியவன் என்பது தோன்றவும் கரம் என் பது விஷத்தின் மறுபெயர்களில் ஒன்று என்பது தோன்றவும் விடைச்சங்

கரற்குந் தடுப்பருந் தன்மையான் என்று கூறிப் பெறவைத்தார் ஆசிரியர். கரம் - விஷம், சிவம் + சிவன் என்பதுபோலக் கரம் + கரன் என இவனுக்கு இப்பெயர் வந்தது உக—உகு=பகுதி; அ=வினையெச்சவிகுதி.

135. (ப-ரை) மாயபந்த மாவினையை - மாய்கையாகிய பெரிய பாச வினையையும், மாளப்பற்றறு - தொலையும்படி பற்றற்ற, பெற்றியோர்க்கும் - தன்மையாளரான பெரியோர்க்கும், உந்தரு நிலையதாகி - விலக்குதற்கரிய தன்மையுடையதாகி, உடன் உறைந்து - உடலினிடத்து (உயிரோடு) வசித்து, உயிர்கள் தம்மை - உயிர்க் கூட்டங்களை, அந்தகற்கு அளிக்கும் - எமனுக்குக் கொடுக்கின்ற, நோய்போல் - வியாதியைப்போன்று, அரக்கி முன்னாக - சூர்ப்பநகை முன் நடந்துவர, சேனை வெள்ளம் - கடல்போன்ற பெரிய சேனைக்கூட்டம், வள்ளியோன் மருங்கு - (எதிர்பார்த்துக்கொண் டிருந்த) ஸ்ரீராமபிரானுக்கு அருகே, வந்தது - வந்து சூழ்ந்தது.

குறிப்பு:—ஆசையற்ற பெரியோர்க்கு அரியது யாதுமில்லை என்றா லும் பிராரத்த கன்மப்படி வருகிற நோயைத் தடுப்பது அவருக்கும் அரிதா கியதுபற்றி 'உந்தரு நிலையதாகி என்று நோயின் வலிமையை விளக்கியும் அரக்கர்கள் என்ற உயிர்க்கூட்டங்களை எமன் கொள்ளுமாறு செய்விக்கும் தன்மையாளான அரக்கியை ஈண்டு அத்தன்மையுள்ள நோயிக்கு உவமை முகத்துத் துளக்கியும் பொருள் நலங்களை வைத்தார் ஆசிரியர். வினையை என இரண்டனுருபு விரிந்தபடியால் மாள என்பதற்கிடையில் 'அவ்வினை' என வருவித்து அதனை எழுவாயாக்கிப் பொருள்கொள்க. உடல்-உடன்-போலி.

136. (ப-ரை) மின்னினற சிலையன் - பிரகாசந்தங்கிய வில்லையுடை யானும, வீரக்கவசத்தன் - வெற்றியுள்ள கவசத்தை யுடையானும், விசித் தவாளன் - (இடையில்) தரித்த வாளினையுடையானும், வடிம்பின்வாளி - கூர்மையுள்ள அம்புகளையுடைய, பொன்னின்ற புட்டிலன் - அழகுதங்கிய அம்பறாதூணியை யுடையானும், புகையும நெஞ்சன் - கோபத்தீ மூண்டு எரிகின்ற மனத்தினை யுடையானு (மாகி), நிலநின்று - (ஸ்ரீ ராமபிரானைப் பார்த்து) நில்லுங்கள் நின்று, யான செய்நிலை - நான செய்கின்ற போரின் வல்லமையை, காண்டி - பாருங்கள், எனவிரும்பி - என்று விருப்பத்தோடு, நேரா முன் நின்று - நேராகவந்து எதிரே நின்று, பின்வந்தோனை - (தமை யன் தடையை மறுக்கமாட்டாமலும் தமையனைத் தனியே அனுப்ப மன மில்லாமலும்) தன்னைத் தொடர்ந்து வருகிற தமபியை, நோக்கினன் மொ ழியலுற்றான் - (ஸ்ரீ ராமபிரான்) பார்த்துச சொல்வானாயினன்.

குறிப்பு:—விசித்தல் - கட்டல், விசித்த - விசி=பகுதி; த்=சந்தி; த்= இடைநிலை; அ=பெயரெச்சவிகுதி. வடிம்பு - கூர்மை. காண்டி - காண்= பகுதி; த்=எழுத்துப்பேறு; இ - முன்னிலையொருமைவிகுதி; த் + ட் ஆனது விகாரம். நோக்கினன் - முற்றெச்சம். வந்தோனை-வினையாலணையும் பெயர்.

137. (ப-ரை) ஆளியின் துப்பினுய் - சிங்கத்தை நிகர்த்த வலிமை பெற்ற இலக்குமணனே, மீள அருஞ்செருவின் - திரும்புதற்கரிய (பெரும்) போரில், விண்ணும் மண்ணும் - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும், என்மேல் வந்தாலும் - என்னுடன் போர் செய்தற்கு வந்து சேர்ந்தாலும், நாள் உலந்து - (அவர்களனைவரும் தமது) ஆயுள் முடியப்பெற்று, அழியும் என்றே - மடிவார்கள் என்றே, உனக்கு நான் உரைப்பது என்னே - நான் உனக்குச் சொல்லவேண்டியது யாது, நின்று - (நீ போருக்கு வராமல் இவ்விடத்திலேயே) இருந்துகொண்டு, இ அமர் எனக்கருளி - இந்தப்போரினை எனக்குக் கொடுத்து, என்தோளினைத்தின்னுகின்ற - எனது புயங்களை மெல்லுகின்ற, சோம்பினை - சோம்பலை, துடைத்தி என்றான் - நீக்கிவிடு என்று (இலக்குமணனைப்பார்த்து ஸ்ரீ ராமன்) கூறினான்.

**குறிப்பு:**—இந்தப் போர் மிகவும் பெரிய போர் என்றும் இதிற் போராட வந்துள்ள இராட்சதர்கள் மிக்க வரமும் பலமும் பெற்றவர்களென்றும் பொருள்கொள்ளுமாறு "மீளருஞ்செரு" என்றும் அங்கனமாயினும் அவர்கள் என்முன் நிற்பதற்காற்றார் என்னும் பொருள் கொள்ளுமாறு "விண்ணும் மண்ணும் என்மேல் வந்தாலும்" என்றும் கூறினார் ஆசிரியர். ஸ்ரீ ராமலக்குமணர்கள் போர்த்தொழிலில் மிகவும் விருப்பமுடையவர்கள் என்ற பெற்றிதோன்ற "இவவரமெனக்கருளி" என்னுஞ் சொல்லாற்றலில் துலங்கவைத்தார். என்னே - ஏகாரம் தேற்றப்பொருளோடு 'சொல்லவேண்டிய தில்லையே' என்ற எதிர்மறை வினாப்பொருளையும் தந்து நின்றது.

138. (ப-ரை) இளையவீரன் - இலக்குமணன், இசைந்திலன் என்றனன் - (உம்மைத் தனியே அனுப்புதற்குச) சம்மதிக்க மாட்டேன் என்று சொல்லி, இராமனேந்தும் - ஸ்ரீ ராமபிரான் ஏந்துகின்ற, குன்றன தோளினாற்றல் - பருவதம்போன்ற புயவலிமையை, உள்ளத்தில் உணரக்கொண்டான் - (பிறகு) தன்மனதில் ஆராய்ந்து தெளிவுகொண்டான், அன்றியும் - அல்லாமலும், அண்ணல் ஆணை மறுக்கிலன் - தமையனான ஸ்ரீ ராமபிரானது கட்டளையை மீறாதவனாய் அங்கை கூப்பி நின்றனன் - தனது அழகிய கரங்குவித்து (நமஸ்கரித்து) நின்றவனாகி, கண்ணீர் நிலம் உற - கண்களிலிருந்து நீர்ததும்பி நிலத்தின்கண் சிந்த, புலர்கின்றாள்பால் - அழுது நிற்கின்ற பிராட்டியின் பக்கதது இருந்தான் - (அங்குக் காவலாக)இருந்தான்.

**குறிப்பு**—முதலில் ஸ்ரீ ராமபிரான் கூறிய மொழிக்கு இலக்குமணன் இணங்கேன் என்றது அவனது அன்னையாகிய சுமத்திரா தேவியின் வாக்குப்படியும் பின்னர் இணங்கியது தமையன் வார்த்தையை மீறலாகாது என்ற முறைமைபற்றியும் தமையன் புயவலியைத் தான் உணர்ந்தறிந்து கொண்டமைபற்றியும் என்க. இதற்கு முன் இவ்வளவு பெரிய அரக்கர் கூட்டத்தைப் பிராட்டி பார்த்திராது பற்றியும் இவ்வாறு திரண்டு வந்த அவாகளுக்கிடையில் ஸ்ரீராமபிரானுக்கு ஏது நேருமோ என்ற கவலையைப் பற்றியும் ஜானகி பயந்து வருந்தினாள் என்பது தோன்ற "கண்ணீர் நிலனு

றப் புலர்கின்றாள்பால்'' என்றார் ஆசிரியர். என்றனன் என்ற சொல்லை இசைந்திலன் என்பதின்பின் கூட்டிப் பொருள் கொள்க. இசைந்திலன், என்றனன், நின்றனன் - இவை முற்றெச்சங்கள். புலர்தல் - வருந்துதல்.

139. (ப-ரை) தனிச்சிலை தரித்தமேரு - ஒப்பில்லாத வில்லேந்திய மலையைப்போன்ற ஸ்ரீ ராமபிரான், முழையினின்று எழுந்துசெல்லும் - குகையினிடத்திலிருந்து வெளிச்செல்லுகின்ற, மடங்கலின் முனிந்து - சிங்கத்தைப்போன்று கோபித்து, தழையுறு சாலை நின்றும் - பன்னகசாலையிலிருந்தும், குழையுறு மதியம் பூத்த - காதணிகளை அணியப்பெற்ற முழுச் சந்திரன் உதித்திருக்கிற, கொம்பு அனாள் - (பூம்) கொம்பையொத்த பிராட்டி, குழைந்து சோர - வாடி வருந்தவும், மழை என - மேகங்களைப் போல, முழங்குகின்ற - ஆரவாரஞ்செய்கின்ற, வாள்எயிற்றுஅரக்கர்காண - பிரகாசமுற்ற வக்கிர தந்தங்களையுடைய அரக்கர்கள் பார்க்கவும், சென்றான் - அவ்வரக்கர் கூட்டத்துள் (தனியே) நுழைந்தான்.

குறிப்பு:—பிராட்டியினது முகத்தைச் சந்திரனுக்கு உவமை கூறவந்த ஆசிரியர் அச்சந்திரனுக்குக் காதணி என்ற ஆபரணம் இல்லாதுபற்றி அதினும் விசேஷமுள்ளது என்னும் பெற்றி தோன்றக் ''குழையுறு மதியம் பூத்த கொம்பினாள்'' என்றார். குழையுறு என்பதைக் கொம்புக்கு அடைமொழியாக் கொண்டு தளிராகிய கொம்பனாளெனினும் பொருந்தும். ''மழை யென முழங்குகின்ற வாளெயிற்றரக்கர்'' என்றாராகலின் அரக்கர்கள் கோபத்தினால் தமது பற்களை நெறுநெறெனக் கடித்த சத்தம் மழையினது முழக்கம் போன்றிருந்தது என்னும் பெற்றி தோன்றிற்று. ஸ்ரீ ராமபிரான் போருக்கெழுந்து செல்லும் கெம்பீரத்தை ஆசிரியர் குகையினின்றெழுந்து செல்லுகிற சிங்கத்தினது வீரத்தோடு உவமையாக்கினார். குழையுறு, தழையுறு வினைத்தொகை சோர + காண - இவ்வினையெச்சங்கள் சென்றானென்னும் வினைமுற்றைத்தழுவி முடிந்தது.

140. (ப-ரை) புனையும் வாகையாய் - சூடுகின்ற வெற்றி மாலையினையுடையவனே, இனைய ஆகலின் - இத்தகைய அவசகுனங்கள் ஏற்படுகின்றபடியால், இவனை - இந்த வீரனை, மானுடன் ஒருவன் என்று நினையல் - மனிதன் என்றும் (அதிலும்) ஒருவன் என்றும் நினையாதே, ஆவது ஒன்று அன்று - இனி ஆகப்போகின்ற காரியங்கள் ஒன்றல்ல, அது நீதி - அது எதார்த்தம், யாம் நின்ற வினையெலாம் செய்து - நாம் இது காலம்வரை செய்துகாட்டாத மாயச் செயல் முழுதும் செய்தும், வெல்லல் ஆம் தன்மையன் அல்லன் - நாம் வெற்றி கொள்ளும்படி பின்னிடக்கூடியவன் அல்லாதவனாக இருக்கின்றான், என் உரை பொறுத்தி எனப் புகன்றான் - (இங்ஙனம் புகன்ற) எனது வார்த்தைகளிலேதுங் குற்றமிருந்தால் அதைப் பொறுத்துக்கொள்வாயென்று (அகம்பன் கரனிடத்துக்) கூறினான்.

குறிப்பு:—"இவனை நினையலாவு தொன்றன்று" எனக்கூட்டி இவனைப் (பற்றிப்) பிரமனோ சிவபிரானோ அல்லது விஷ்ணுவோ என்று பலவாறு நினைக்கும்படியா யிருக்கின்றான் எனப் பொருள் கொள்ளவும் பொருந்தும். நினையல்-நினை=பகுதி; அல்=எதிர்மறைஏவலொருமைவிகுதி. வாகையாய்-விளிவேற்றுமையில் ஈறுதிரிந்தது. வினை -வஞ்சனையெனும் வினைமாற்று.

141. (ப-ரை) உரைத்த வாசகங் கேட்டலும் - (அகம்பன்) சொன்ன (இந்த) வார்த்தையைக் கேட்டதும், உலகு எலாம் உலைய - எல்லா உலகும் (திடு திடு என்று) நடுங்கும்படி, சிரித்து - நகைத்து, தேவரைத் தேய அரைத்த - தேவர்கள் எல்லாம் தேய்ந்து போகும்படி அரைத்துத் தள்ளிய, அம்மியாம் அலங்கு எழில் தோள் - அம்மிக்கல் போன்று அசைகின்ற அழகிய (எனது) புயங்கள், அமர் வேண்டி இரைத்து வீங்குவ - பெரும் போரை விரும்பிக் குதூகலித்துப் பூரிப்புவையா யிருக்கின்றன, நின்ற என் சேவகம் - நிலைபெற்ற எனது வீரத்தனம், மானுடற்கு - (இந்த) மனிதனுக்கு எளியவோ என்றான் - இலேசானவையாகுமோ என்று கேட்டான்.

குறிப்பு:—தேவர்களது கருவையே அறுப்பதாக அசுரர்கள் கங்கணங் கட்டி யிருக்கின்றமையால் தனது புயவலியின் பெருமை தோன்ற அவர்களை அரைத்த அம்மிபோல் என்ன உவமானமாகக் கூறினான் அசுரன் என்று பொருள்கொள்க. இதில் உள்ள ஆம் என்னும் சொல் போல் என்னும் பொருளில்வந்தது. அல்லது இவ்வாறு எண்ணியிருப்பதை முடித்ததாகக் கூறினான் எனினும் பொருந்தும். தேவர்களோடு எதிரிஸ்தானம் வகித்துள்ள அரக்கனாகிய எனக்குக் கேவலம் ஒருமனிதன் எதிரியாவனோ என்னும் பெற்றிதோன்ற "உலகெலா முலையசிரித்து மானுடற் கெளியவோ" என்றார் ஆசிரியர். வீங்குவ-வீங்கு=பகுதி; அ=பலவின்பால் முற்றுவிகுதி.

142. (ப-ரை) மருள்தரும் களிவஞ்சனை - மயக்கத்தைத் தரத்தக்க கள்ளுண்ணும் வஞ்சகமுள்ள - வளை எயிற்று அரக்கர் - வளைந்தபற்களையுடைய இராட்சதரது, கருடன் அஞ்சுறும் - கருடனும் காண்பதற்கு அஞ்சுகின்ற தோற்றத்தோடு கூடிய, கண்மணி - கண்களிலுள்ள கருமணியை, காகமும் கவர்ந்த - காக்கைக் கூட்டங்களும் கொள்ளைகொண்டன, அருள் தரும் - கருணை புரிகின்ற, திறத்து - மேன்மையையுடைய, அறம் அன்றி - தருமமென்பதல்லாமல், வலியது - வலிமையுள்ளது, உண்டோ - வேறு உளதோ (இல்லை என்றபடி), இருள்தரும் புரத்து இழுதையர் - இருளைக் கொடுக்கின்ற சரீரத்தோடு கூடிய அறிவீனராகிய அவ்வரக்கர்களிடத்தில், பழுது உறற்கு எளிதே - கேடு சம்பவிப்பது இலேசானதேயாகும்.

குறிப்பு:—களி - கள். வளை எயிறு - வளைந்த பற்கள், கருடன் என்பதிலுள்ள உயர்வு சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. காகமும் என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்பில் வந்தது. ஆமோ என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப்பொருளில் வந்ததாகவே 'ஆகாது' என்னும் பொருள்தந்து

நின்றது. புரம் - சரீரம். இராட்சதர்களுடைய சரீரத்திலுள்ள கருப்பு நிறம் மற்றொன்றிற் பட்டால் அதுவும் கருப்பு நிறமாய்க் காட்டுமென்ற பொருள்தருமாறு அவர் நிறத்தை விசேடித்து இருள்தரும் என்றார் ஆசிரியர். கவர்ந்த – கவர் = பகுதி; அ = பலவின்பால் படர்க்கை வினைமுற்று விகுதி.

143. (ப-ரை) கைக்கரி அன்னவன் - தும்பிக்கையினை யுடைய யானையை நிகர்த்த (ஸ்ரீ ராமபிரானது), பகழி - பாணங்கள், கண்டவர் மெய்க்குலம் – பார்த்த இராட்சதர்களின் சரீரக்குவியல்களை, வேரொடும் துணித்து - அடியோடுமே அறுத்து, வீழ்த்தின - (கீழே) தள்ளின, மைக்கரு மனத்து ஒரு வஞ்சன் - குற்றமென்ற கருவினிடத்துதித்த (வன்) மனத்தினையுடைய ஒரு வஞ்சகனுன, மாண்புஇலன் - தரமில்லாதவன், பொய்க்கரி கூறிய - நியாய மன்றினிடத்துப் பொய்சசாட்சி சொன்ன, கொடுஞ்சொல் போன்ற - கொடிய வார்த்தைகளை (அக்கணைகள் அனைத்தும்) ஒத்தன.

குறிப்பு:—ஸ்ரீ ராமபிரானது போர்த்திறம் தோன்ற அவரைக் கைக்கரி என்று உவமானித்தும் அவரது பாணங்களின் வலித்திறம் தோன்ற அவை களைப் பொய்ச்சாட்சி சொல்லுபவர் வார்த்தையின் கொடுமை என்று உவமானித்துங் கூறினர் ஆசிரியர். பொய்ச்சாட்சி சொல்லி வயிறு வளர்த்துத் திரிபவனது இழிவுதோன்ற அவனது மனதைக் குற்றமென்ற கருவிலிருந்து உதித்ததென்று விசேடித்துக் கூறப்பட்டது. ஏ - ஈற்றசை.

144. (ப-ரை) திரிசிராவெனுஞ் சிகரம் - திரிசிரன் என்னும் பெயரோடு கூடிய சேனைகளினது தலைவன், மண் சேர்தலும் - ஸ்ரீ ராமபாணத்தால் வதையுண்டு பூமியில் வீழ்ந்ததும், செறிந்த நிருதர் - ஆங்கு நிறைந்து சூழ்ந்துகொண்டிருந்த இராட்சதர்க(ளான), பரிதிவாளினர் - பிரகாசமுற்ற வாளாயுதத்தோடு கூடிய, கேடகந் தடக்கையர் - கேடகத்தைத் தரித்துள்ள விலாசமான கையோடு கூடியவர், தூடணன் விலக்கவும் - தூடணன் என்கின்ற மற்றொரு அரக்கன் ஓடாதீர்கள் என்று தடுத்தும், பரந்த குருதி நீரிடை - பரவி நீரைப்போல் ஓடுகின்ற இரதத்தினூடு, வார்கழல் - நீண்ட பாதங்கள், கொழுங்குடர் - (ஆங்கு மடிந்து கிடக்கின்ற அரக்கர்களினது) கொழுத்த குடல்களில், தொடக்க - மாட்டிக்கொள்ளும்படி, நில்லார் ஓடினர் - நின்று (திரும்பிப் பாராதவராயும்) ஓட்டமெடுத்தார்கள்.

குறிப்பு:—திரிசிரன் என்பவன் சேனைகளுக்கோர் அதிபதியானது பற்றி அவனைச் சிகரம் என்றார் ஆசிரியர். தூடணன் விலக்கவும் - இதிலுள்ள உம்மை தூடணன் என்பவனும் மற்றொரு சேனைத்தலைவன் என்ற சிறப்பினைத் தந்து நின்றது. பரிதி - சூரியன், ஈண்டிது சூரியனது பிரகாசத்தைக் குறித்து நின்றது. கழல் - பாதம் எனினும் வீரர்கள் பாதத்தில் அணிந்துள்ள ஓர்வகை ஆபரணமெனினும் பொருந்தும் ஸ்ரீ ராமபிரானது பாணத்துக்குப் பயந்தோடுகின்ற இராட்சதர்களை ஆசிரியர் "பரிதிவாளினர் கேடகத் தடக்கையர்" என்று சிறப்பித்துக் கூறிய பெற்றி நகைச்

சுவை பயக்குந்தன்மையது. தொடக்க-சிக்கிக்கொள்ள; தொடக்கு=பகுதி; அ=வினையெச்ச விகுதி. இது ஓடினர் என்னும் வினைமுற்றைத் தழுவிற்று.

145. (ப ரை) அனையராகிய அரக்கரை - அவ்வாறு ஓடிக்கொண்டிருக்கிற இராட்சதர்களை, நின்றே - (தடுத்து) நின்று, துனையும் வார்பரித் தேரினன் - விரைவாகச் செல்லுகின்ற நெடிய குதிரைகள் கட்டிய தேரையுடையவனாகிய, தூடணன் - தூடணன் என்பவன், ஆண்தொழிற்கமைந்த - ஆண்மைத்தனத்துடன் ஒத்த, வினைய நீங்கிய மனிசரை - போர்த்தொழிலுக்கேற்ற செயல் இல்லாத மனிதர்களுக்கு, வெருவன் மின் - நீங்கள் பயப்படவேண்டாம், அன்ன நினையும் நான் - இவ்வாறு மனிதருக்குப் பயந்து ஓடக்கூடாதென்று நினைக்கின்ற நான், உமக்குரைப்பது முண்டெனா-உங்களுக்குச் சொல்லவேண்டியது மிருக்கின்றது என்று, சொன்னான்-(அவர்கள் மனதில் நன்றாய்ப் பதியவேணுமென்கிற எண்ணத்தோடு)எடுத்துக்கூறினான்.

**குறிப்பு:**—நின்றே என்ற சொல்லாற்றலால் ஓடுகின்ற அரக்கர்களை மிகவும் பிரயாசையுடன் சிறிது நேரம் நிற்கும்படி தடுத்தனன் என்பதும் பின்னரும் அவர்கள் ஓடினர் என்பதும் பெறப்பட்டது. மானிடரைப் பற்றி அரக்கர்கள் கருதியுள்ள இழிவு இத்தகையது என்பதை மனிசர் என்ற சொல் துலக்கிநின்றது. அரக்கரை நின்றே - அரக்கரைத் (தடுத்து) நின்றே எனக்கொண்டு கூட்டிப்பொருள்கொள்க. தடுத்து -சொல்லெச்சம். மனிசரை வெருவன்மின் - மனிசருக்கு வெருவன்மின்; இரண்டன் உருபு நான்கன் உருபுப் பொருளில் மயங்கிற்று.

146. (ப-ரை) வசையாமெனும் - வசை என்பதற்குக் காரணமான, பயம் - கோழைத்தனம், மனத்துண்டெனா வாழும் - மனதில் குடிகொண்டிருக்கிறதென்று சீவிக்கும், கொச்சை மாந்தரை - கீழ்மையான மனிதருக்கு, கோல்வளை மகளிரும் - வளைந்திருக்கின்ற வளையலைக் கையிலணிந்துள்ள பெண்களுங்கூட, கூசார் - பயப்படமாட்டார், நிச்சயம் எனும் - தைரியம் என்று சொல்லப்படுகிற, கவசந்தான் - காவற் போர்வைதான், நிலைநிற்பதன்றி - கடைசிவரையும் நிலைதிருப்பதல்லாமல், அசசமென்னு மீது - இப்படிப் பயந்து ஓடுகிற இந்தக் கோழைததனம், ஆருயிர்க் கருந்துணையாமோ - உங்களுடைய அரிய உயிருக்கு ஒப்பற்ற துணையாகுமோ.

**குறிப்பு:**—வசை என்பது எதுகை நோக்கி வச்சை என விகாரப்பட்டது. கோல்வளை - செய்த வளையல் எனவும் பொருந்தும்; வளைந்திருப்பது வளை - இது தொழிலாகுபெயராய் அவ் அணியின் பெயராயிற்று. மகளிருங் கூசார் - உம்மை இழிவு சிறப்புப் பொருளது. அச்சம் துணையாகாதென்றாராகலின் நிச்சயமென்பது தைரியமெனப் பொருள்தந்து நின்றது. ஆமோ என்பதின் ஈற்றிலுள்ள ஓகாரம் ஆகாதென்றபடி எதிர்மறை.

147. (ப-ரை) செம்புகாட்டிய - (கோபத்தில்) சிவப்பு நிறங்காட்டிய, கண்ணிணை - இரண்டு கண்களும், பாலெனத்தெளிந்நீர் - (பயத்தினாலே கோபந்தீர்ந்ததால்) வெளிறியநிறமாகப் பெற்றவாகளே, வெம்புகாட்டிடை-வெப்பமுற்ற கொடியகாட்டினூடு, நுழைதொறும்-நுழைந்து நுழைந்து ஓடுகின்றபோது, வெரிநுறப் பாய்ந்த - முதுகுப் புறத்தில் பதியும்படி பாய்ந்திருக்கிற, கொம்பு - மரக்கொம்புகளின் காயத்தை, குல மங்கையர்க்கு - கற்புடைய (உங்கள) மனைவிமாருக்கு, காட்டுதிரோ - காண்பிப்பீரோ, (அல்லது) தடமாரபிடை - விலாசமுற்ற மார்பினகத்து, குளித்த - முழுகிப் பாய்ந்திருக்கிற, அம்பு காட்டிதிரோ - (எதிரியினால் எய்யப்பட்ட) பாணங்களினது காயத்தைக் காண்பிப்பீரோ சொல்லுங்கள்.

குறிப்பு:—செம்பு - பஞ்ச லோகங்களில் ஒன்று; செம்பு சிவப்பு நிறமும் பால் வெண்மை நிறமும் பெற்றுள்ளமையால் செம்பு பால் எனக் கூறினர் ஆசிரியர். கொம்பு அம்பு என்பன கொம்பினாலும் அம்பினாலும் பட்டுள்ள காயங்கள் எனப் பொருள் தந்து நின்றன. போரிற் சென்று மடிந்த பிரேதங்களை அவரவர் மனைவிமார் ஆராய்ந்தெடுத்து மார்பிற் பட்ட காயத்தால் மடிந்தவனை வீரன் என்றும் முதுகிற் பட்ட காயத்தால் மடிந்தவனைக் கோழை என்றும் கண்டு முன்னவனை விமரிசையாகவும் பின்னவனை இழிவாகவும் சடங்கு நிறைவேற்றும் முறைபற்றிக் 'கொம்பு அம்பு காட்டுதிரோ குலமங்கையர்க்கம்மா'' என்று கூறப்பட்டது அம்மா இரக்கப் பொருளோடு வியப்புப் பொருளையும் காட்டவந்த அசைச்சொல்.

148. (ப-ரை) என்று - என்று வீரங்கூறி, தானும் - (தூடணன் என்று சொல்லப்பட்ட) அவனும், தன் எறிகடற் சேனையும் - அலையை வீசுகின்ற கடலுக்குச் சமானமான தனது சேனை சைன்யங்களும், இறை நீர் - சிறிது நேரம் நீங்கள், என் நெடுஞ்சிலைவலி - எனது நீண்ட வில்லினது வலிமையை, நின்று காண்டிரென - நின்றுபாருங்கள் என்று, நேராகச்சென்று - (ஸ்ரீராமபிரானுக்கு) முன்னர் சென்று, தாக்கினன் - எதிர்த்தான், தேவரும் மருள்கொண்டு திகைத்தார் - (இவன் வந்து நிற்கிற நிரத்தைக்கண்ட) தேவர்களும் தமது மனந் திகைத்து நின்றார்கள், இராமனும் - ஸ்ரீ ராமபிரானும், நன்று காதறி என்று - உனது சேனைகளையும் உன்னையும் ஞாபகமாகக் காதத்துக்கொள்வாயென, எதிர்செல நடந்தான் - எதிர்த்துச் சென்றான்.

குறிப்பு:—தூடணனது போர் வலிமையைச் சிறப்பித்தற்குத் தேவரும் மருள்கொண்டு திகைத்தார் என்றும் ஸ்ரீ ராமபிரானது போர் வலிமையைச் சிறப்பித்தற்கு நன்று காத்தி என்றும் புனைந்து கூறினார் ஆசிரியர். 'தேவரும் இராமனும்' இவைகளின் ஈற்றும்மை சிறப்புப் பொருள் பெற நின்றன.

149. (ப-ரை) சென்ற தேரையும் - (ஸ்ரீராமபிரான் எதிரில்) சென்று (நின்ற) தேரையும், தேர்மேல் - அந்தத் தேரின்மீது, சிலையுடைமலையென - வில்லைக் கையிற் பிடித்திருக்கிற (ஒரு) பருவதம் என்ன, நின்ற தூட

ணன் தன்னையும் - நின்றுகொண் டிருக்கிற தாடணன் என்பவனையும், நோக்கிய நிமலன் - பார்த்த ஸ்ரீ ராமபிரான், நன்று நன்று நின்நிலையென - நல்லது நல்லது உன்னுடைய வல்லமை என்று, அருளினை நயந்தான் - கருணையோடு அவனைச் சிறிது மதித்தனர், என்றகாலத்தவ் வெய்யவன் - என்று புகழ்ந்துகொண்டிருக்கும்பொழுதே அந்த (தாடணன் என்கிற) கொடியவன், பகழிமூன்றெய்தான் - (பராக்கிரமம் பொருந்திய) மூன்று பாணங்களை (எடுத்து) ஸ்ரீ ராமபிரான் மீது பிரயோகித்தான்.

**குறிப்பு**:—நிமலன் மலபந்த மற்றவன். நன்று நன்று - வியப்பின் பொருட்டுநித்த அடுக்குதொடர். தாடணன் கொணர்ந்த கடல் போன்ற பெருஞ் சேனைகள் எல்லாம் மடிந்தும் அவன் தானே சிறிதும் அஞ்சாது ஸ்ரீ ராமபிரான் முன் வந்து நின்றான் என்றும் அவ்வாறு நின்றதும் பேசசு முடியுமுன் பாணப்பிரயோகஞ் செய்தானென்றும் பெற்றி தோன்ற "என்ற காலை அவ்வெய்யவன் பகழி மூன்றெய்தான்" என்றார் ஆசிரியர்.

150. (ப-ரை) தேவர் ஆர்த்தெழ - வானவர்கள் சந்தோஷ முழக்கமிட்டுக் கொண்டாடும்படிக்கு, முனிவர்கள் - தவரிஷிகள், திசைதொறும் சிலம்பும் - நான்குதிக்குகளிலிருந்தும் ஓதுகிற, ஓவில் வாழ்த்தொலி - குறைவில்லாத ஆசீர்வாதத்தின தொனி, நாற்கடல் முழக்கென ஓங்க - நான்கு பக்கத்திலுஞ் சூழ்ந்துள்ள கடல் முழக்கமென முழங்க, வல்லையேல் நீ - நீ ஒரு சமர்த்தனாயிருந்தால், காவடா இது - இந்தப் பாணத்திற்கு நீ தப்பிக் கொள்ளடா, எனக் கணையொன் றேவினன் - என்று (ஸ்ரீ ராமபிரான்) ஒரு பாணத்தை எடுத்துப் பிரயோகம்பண்ணினார், அவன் - அந்த அரக்கன் எயிறுடை நெடுந்தலை இழந்தான - வக்கிர தந்தங்களோடு கூடிய தனது சிரம் துண்டாய் அற்றுவிழ முண்டமாய்ப் புவியில் வீழ்ந்தான்.

**குறிப்பு**:—சிலம்பல் - சத்தமிட்டு ஓதுதல். ஓவு - குறைவு பஞ்சவடி என்ற ஸ்தானத்தைசசுற்றி நான்கு பக்கங்களிலும மகரிஷிகள் சூழ்ந்து தவம் புரிந்துகொண்டிருக்கின்றார் என்ற பெற்றி தோன்றவும் அவர்கள் வாழ்த்தியவை அனைத்தும் நான்குவேத மந்திரங்கள் என்ற பெற்றி தோன்றவும் நாற்கடல் முழக்கென ஓங்க என்றார் ஆசிரியர். தாடணனது தலையை நெடுந்தலை என்று சிறப்பித்தாரெனினும் அத்தலை கோரரூபமுடையது என்னும் பொருள் துலங்க எயிறுடைநெடுந்தலை என்றார். தாடணனாலே தேவர்களும் முனிவர்களும் பல இடையூறுகளுக்காளா யிருந்தன ரென்பதும் இனி அத்தகைய இடையூறுகள் நேரா என்று அவர்கள் சந்தோஷமடைந்தாரென்பதும், "தேவரார்த்தெழ முனிவர்கள் வாழ்த்தொலி ஓங்க" என்ற பெற்றி'யால் பெறவைத்தார். எயிறுடை - எயிற்றுடை என மிகாதியல்பாயிற்று; "நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள் டறவொற்றிரட்டும் வேற்றுமைமிகவே என்னுஞ் சூத்திரத்திறுதியில் மிகவே" என்றபடியால் அமையும்.